# தேசியம்
## Nation



www.thesiyamnation.com January 2017

# கனடா
## நூற்று ஐம்பதாவது ஆண்டு
## நிறைவு விழாக் கொண்டாட்டம்



# PUNCH SOCKALINGAM



VOTE



To request my lawn sign
on your property and volunteer to support
my campaign please call

**647-649-5550**

info@votepunch.ca | www.votepunch.ca

VOTE
PUNCH
SOCKALINGAM
for
WARD 42

## CANDIDATE FOR CITY COUNCILLOR

## SCARBOROUGH – ROUGE RIVER, WARD 42

---

**ADVANCED VOTING**
Sat Feb 4th, 2017
Sun Feb 5th, 2017

**ELECTION DAY**
Mon Feb 13th, 2017

# PUNCH FOR CHANGE

## தேசியம் -Nation

Member of National Ethnic
Press and Media Council of Canada

வெளியீட்டு ஆசிரியர்
இலங்கதாஸ் பத்மநாதன்

Publishing Editor
Lankathas Pathmanathan

வெளியீட்டாளர்கள்
Free Voice Media

வடிவமைப்பு
மதுரன் ரவீந்திரன்
(Puppeteer Studios)

அச்சகம்
Apex Creations

தொலைபேசி
416.876.9799

இணையம்
www.thesiyamnation.com

மின்னஞ்சல்
Info@thesiyamnation.com

முகவரி
104-1920 Ellesmere Road.
Suite 356
Toronto, Ontario
M1H2G1



## உள் உணர்ந்து...

# சவால்களை எதிர்கொள்ளும் ஆண்டு இது...

சவால்கள் நிறைந்தஒரு ஆண்டில் இருந்து சவால்களை எதிர்கொள்ளும் இன்னுமொரு ஆண்டுக்குள் காலடி எடுத்து வைத்திருக்கின்றோம்.

தனது நூற்று ஐம்பதாவது ஆண்டு நிறைவைக் கொண்டாடும் கனடாவில் அரசியல் மற்றும் பொருளாதார சவால்கள் நிறைந்தவருடமாக 2017 அமையப்போகின்றது.

2018 ஆம் ஆண்டு ஒன்ராரியோ மாகாணத்திலும் அதன் நகரசபைகளிலும் தேர்தல்கள் நிகழவுள்ளன. இந்த தேர்தலுக்கான காய்நகர்த்தல்கள் பலவும் இந்த ஆண்டில் நிகழும். தேசியரீதியில் பிரதான எதிர்க்கட்சியான கொன்சவேட்டிவ் கட்சியின் தலைமைத்துவத் தெரிவு மேமாதமும், புதிய ஜனநாயகக் கட்சியின் தலைமைத்துவத் தெரிவு ஒக்டோபர் மாதமும் நிகழவுள்ளன. இந்தத் தெரிவுகள் மூலம் கனடாவின் பிரதான இரண்டு அரசியல் கட்சிகள் நிரந்தரத் தலைமைகளும் ஆளும் லிபரல் அரசாங்கத் தின் ஆட்சியை சவால்களுக்கு உட்படுத்தும்.

பொருளாதாரரீதியில் நிலையற்ற வீட்டுச்சந்தையின் விலைகள் மீண்டும் நாடளாவிய ரீதியல் மீண்டும் பிரதான கவனத்தை ஈர்க்கும்.ரொறன்ரோவின் நீண்டகால சவால்களில் ஒன்றான போக்குவரத்து பிரச்சினையை நகரபிதா ஜோன்ரோரி முன்வைக்கும் நெடுந்தெருக்களுக்கான வரிவசூலிப்பு எவ்வாறு எதிர்கொள்ளப் போகின்றது என்ற கேள்வியும் உள்ளது.

அண்டைய நாடாக அமெரிக்காவின் புதிய ஆட்சிமாற்றத்தின் வருந்தத்தக்க அறிகுறிகள் குறித்த எச்சரிக்கை மணிகள் ஆங்காங்கே கேட்க ஆரம்பித்து ள்ளன. இராஜ்ஜியத் தலைவர், அரசாங்கத் தலைவர் மற்றும் முப்படை களின் தளபதி என்ற ரீதியில் முக்கியமான அதிகாரங்களைக் கொண்ட பதவியில் இந்தமாதம் டொனல்ட் ட்ரம்ப் அமர்கின்றார். உலக வல்லரசி ன் தலைமை நிர்வாகியின் நகர்வுகள் அமெரிக்கர்களை மாத்திரமல்லாது உலகின் அனைத்து வாசிகளையும் ஏதோ ஒருவகையில் பாதிக்கும்.

இவை அனைத்திற்கும் மத்தியில் தாயக உறவுகளையும் மறந்துவிடல் ஆகாது. யுத்தத்திற்கு பின்னர் தேசத்தை கட்டியெழுப்புவதில் ஸ்ரீலங்கா எதிர்கொள்ளும் சவால்களில் நாடளாவிய ரீதியில் தமிழர்கள் முகங்கொடுக்கும் சவால்கள் அதிகமானவை. 2009 இல் யுத்தம் நிறைவுக்கு கொண்டு வரப்பட்டு 8 வருடங்களை தாண்டப் போகின்றோம். ஆண்டுகள் கடந்த அளவிற்கு மக்களின் வாழ்வில் மாற்றங்கள் நிகழவில்லை.

யுத்தகோஷம் எழுப்பிய பலரும் மௌனிகளாகிவிட்டனர். அவர்களின் மௌனத்தை புறந்தள்ளி இடித்துபோன மக்களின் வாழ்மை மீட்டெடுக்கும் கடமை புலம்பெயர் தேசத்தின் மீது உள்ளது. அவசர அன்றாட உதவிகள் என்ற நிலையைத் தாண்டி தொலைந்து செல்லும் இளம் வயதினரின் எதிர்காலத்தைக் கருத்தில் கொண்டு நகர்வுகள் மேற்கொள்ளப்பட வேண்டியதுஅவசியம். இதற்கு புலம்பெயர் சமூகம் ஒன்றிணைந்த செயற்பாடுகளில் ஈடுபட வேண்டும். அதே வேளையில் எமது அரசியல் அபிலாசைகளையும் கைவிடமுடியாது. மக்கள் வாழ்வின் மேம்பாடும் தெளிவான அரசியல் நோக்கமும் ஒரே நேரத்தில் பயணிக்கப்பட வேண்டிய இரு பாதைகள்.



Toront
Distric
School
Board

# Trustee Parthi Kandavel

# தமிழ் மரபுத் திங்கள் போட்டிகள்

# Tamil Heritage Month Contests

## வழங்குபவர் கல்விச்சபை உறுப்பினர் பார்த்திபன் கந்தவேள்

# Theme: Roots & Routes

On Canada's 150th anniversary, we acknowledge the enduring presence of our Indigenous peoples, and recognize with challenges, Canada has become home to many communities seeking refuge and opportunities.

**How has your family's route(s) to Canada as well as your cultural roots shaped and continue to shape your identity as a Tamil Canadian today?**

This contest will give students the opportunity to explore, reflect and creatively express their understanding of their roots and routes by using the guiding question above. Contest ***only*** open to current TDSB students.

**Essay Contest:** **3 Categories**

| | |
|---|---|
| Grades 4–6: | 200 – 250 words |
| Grades 7–9: | 250 – 350 words |
| Grades 10–12: | 350 – 500 words |

**Original Art Contest:** **4 Categories**

Grades K–3, 4–6, 7–9, 10–12

**Speech Contest:** **3 Categories**

| | |
|---|---|
| Grades 4-6: | 2 - 3 minutes |
| Grades 7-9: | 3 minutes |
| Grades 10-12: | 3 - 4 minutes |

**Art & Essay Deadline:**
Monday, January 16th
Drop-off at school or in-person:
Attn: Dani Carnevale
17 Fairmeadow Centre, Room 104
Times New Roman, 12, double-spaced

**Speech Contest:**
Register & attach speech to:
TDSBTamilHeritageMonth@gmail.com
by Monday, January 16th
Contest held on Thursday, January 19th

**Prizes: (per contest, per category)**

 1st Prize: ***$100***

 2nd Prize: ***$75***

 3rd Prize: ***$50***





# கனடா நூற்று ஐம்பது

முகப்புக் கட்டுரை

இந்த ஆண்டு தனது நூற்று ஐம்பதாவது ஆண்டு நிறைவைக் கொண்டாடுகின்றது கனடா. 1867 ஆம் ஆண்டு யூலை மாதம் 1 ஆம் திகதி Ontario, Quebec, New Brunswick மற்றும் Nova Soctia ஆகிய நான்கு மாகாணங்கள் இணைய கனடா என தற்போது நாம் அழைக்கும் நாடு ஒரு கூட்டமைப்பாக உருவானது. அதனைத் தொடர்ந்து மேலும் மாகாணங்களும் பிரதேசங்களும் (territories) இணைந்து கொள்ள கனடா என்ற நாடு முழுமை கண்டது. 1999 ஆம் ஆண்டு Northwest பிரதேசத்திலிருந்து பிரிந்து கனடாவுடன் இணைந்து கொண்டது Nunavut. தற்போது 10 மாகாணங்களையும் மூன்று பிரதேசங்களையும் தன்னகத்தே கொண்ட கனடா மொத்தம் 9.98 மில்லியன் சதுர கிலோமீட்டரைக் கொண்ட நாடாகும். கனடா உலகளாவிய ரீதியில் மொத்தப் பரப்பளவில் இராண்டாவது பெரிய நாடும், நிலப்பரப்பளவில் நான்காவது பெரிய நாடுமாகும். அமெரிக்காவுடனான கனடாவின் எல்லையானது உலகின் மிக நீளமான நில எல்லையாகும்.

யூலை மாதம் 1 ஆம் திகதி கனடா தனது 150 ஆவது நிறைவு ஆண்டைக் கொண்டாடும் முகமாக நாடளாவிய ரீதியில் ஆண்டு முழுவதும் பல்வேறு நிகழ்வுகள் ஏற்பாடு செய்யப்பட் டுள்ளன. கனடிய மத்திய அரசாங்கம் பல்வேறு பங்காளிகளுடன் இணைந்து இந்த கொண்டாட்டங்களை ஏற்பாடு செய்துள்ளது. தவிர மாகாண மற்றும் நகரசபைகளும் இதற்கான ஏற்பாடுகளை மேற்கொண்டுள்ளன. இந்தக் கொண்டாட்டங்களை ஆரம்பிக்கும் முகமாக December மாதம் 31 ஆம் திகதி மொத்தம் 19 இடங்களில் ஆரம்ப நிகழ்வுகள் நடைபெற்றன. இதன் பிரதான நிகழ்வில் தலைநகர் ஒட்டாவாவில் கனடாவின் ஆளுநர் நாயகம் David Johnston கனடிய பாரம்பரிய அமைச்சர் MélanieJoly யுடன் இணைந்து நூற்றாண்டு சுடர்விளக்கை (centennial flame) ஏற்றிவைத்தார்.

கனடா 150 க்கான இலட்சினையை ரொறன்ரோவைச் சேர்ந்த 19 வயதான மாணவியான Ariana Cuvin வடிவமைத் துள்ளார். கனடாவின் 150 ஆவது நிறைவைக் குறிக்கும் முகமாக Royal Canadian Mint புதிய நாணயங்களை அறிமுகம் செய்கின்றது. கனடிய அரசாங்கம் இந்த வருடம் நாட்டில் உள்ள அனைத்து தேசிய பூங்காங்களுக்குமான இலவச அனுமதியை அறிவித்துள்ளது.

தேசியம் கனடா 150 ஐ கொண்டாடும் முகமாக தொடர்ந்தும் சிறப்புப் பகுதிகளை இந்த வருடம் முழுவதிலும் வெளியிடும்.






# பெற்றோர் மற்றும் பெற்றோரின் பெற்றோரை அழைப்பதற்கான விண்ணப்பங்களை ஏற்கும் நடைமுறையில் மாற்றங்கள்

## Changes to application intake process for 2017 Parent and Grandparent Program

சபரி கிருபாகரன்

குடும்ப ஒருங்கிணைப்பை கனடிய அரசாங்கம் தனது குடியேற்றக் கொள்கையில் முக்கியமானதொன்றாக தொடர்ந்தும் கருதுகின்றது. இதன் ஒரு அங்கமாக இந்த வருடம்முதல் பெற்றோர், தாத்தா மற்றும் பாட்டியை (பெற்றோரின் பெற்றோர்) அழைப்பதற்கான திட்டத்திற்கான விண்ணப்பங்களை ஏற்கும் நடைமுறையில் மாற்றங்கள் அறிமுகமாகின்றன. தமது பெற்றோர் மற்றும் பெற்றோரின் பெற்றோருக்கான அனுசரணையை வழங்கவிரும்பும் கனடியர்கள் அனைவருக்கும் வாய்ப்பளிக்கும் விதமாக இந்த மாற்றம் அறிவிக்கப்படுகின்றது.

இந்தத் திட்டமானது ஒவ்வொரு ஆண்டும் ஆயிரக்கணக்கான குடும்பங்களை ஒன்றிணைக்கின்றது. இந்த ஆண்டிற்கான இந்தத் திட்டத்தின் கீழ் அனுசரணையாளர் (Sponsorship) விண்ணப்பங்களை எவ்வாறு சமர்ப்பிப்பது என்பதில் மாற்றங்கள் அறிவிக்கப்பட்டுள்ளன. அண்மைக்காலமாக, விண்ணப்பதாரிகளின் எண்ணிக்கை உயர்வைக் கட்டுப்படுத்தும்

"

**தமது பெற்றோருக்கும் பெற்றோரின் பெற்றோருக்கும் அனுசரணை வழங்க விரும்புவோருக்கான நடைமுறையை சீர்படுத்த, பழைய விண்ணப்பதாரிகளின் கருத்துக்களை நாங்கள் கேட்டுவருகின்றோம். விண்ணப்பதாரிகளின் பெயர்கள் தெரிவுசெய்யப்படுவதற்கு அவர்கள் அனைவருக்கும் ஒரேமாதிரியான வாய்ப்பு வழங்குவதை நாங்கள் உறுதிப்படுத்துகின்றோம்"**

நோக்கிலும் உள்வாங்கல் மற்றும் திட்டம் மீதான ஆர்வத்தைக் கையாளும் நோக்கிலும் அனுசரணையாளர் விண்ணப்பங்களை ஏற்றுக்கொள்வதை கனடிய குடிவரவு, அகதிகள் மற்றும் குடியுரிமை மையம் (IRCC) மட்டுப்படுத்தியுள்ளது.

இனிவரும் காலத்தில் கனடாவிற்கு தமது பெற்றோர் மற்றும் பெற்றோரின் பெற்றோரை அழைத்துக் கொள்ள விரும்புவோருக்கு, தமது விருப்பத்தை இணைய விண்ணப்பங்களை பூர்த்தி செய்வதன் மூலமாக தெரியப்படுத்த 30 நாட்கள் அவகாசம் வழங்கப்படவுள்ளது. இந்த விண்ணப்பதாரிகளில் இருந்து IRCC 10,000 பேரை தெரிவுசெய்து, அவர்களுக்கு முழுமையான விண்ணப்பங்களை அனுப்புவதற்கான கோரிக்கை விடுக்கப்படவுள்ளது.

பெப்ரவரி மாதம் 2ஆம் திகதிக்குள் தமது பெற்றோர் அல்லது பெற்றோரின் பெற்றோருக்கு அனுசரணை வழங்கவிரும்பும் கனடிய குடியுரிமை பெற்றவர்கள் (Canadian citizens) மற்றும் நிரந்தர வதிவிடவாளர்கள் (permanent residents) IRCC இணையத்தளத்தில் (www.cic.gc.ca) உள்ள விண்ணப்பங்களை பூர்த்தி செய்து, தமது விருப்பத்தை திணைக்களத்திற்கு தெரியப்படுத்தலாம். இந்த விண்ணப்பங்கள் இணையத்தில் ஜனவரி மாதம் 3ஆம் திகதி நண்பகல் (EST) முதல் பெப்ரவரி மாதம் 2ஆம் திகதி நண்பகல் (EST) வரை (30 நாட்களுக்கு) கிடைக்கும்.

முதற்பெயர், குடும்பப்பெயர், பிறந்ததிகதி, பிறந்தநாடு, பிரதான வீட்டு முகவரி, அஞ்சல் குறியீடு மற்றும் மின்னஞ்சல் முகவரி என்பவை விண்ணப்பத்தில் கோரப்படும்.

இணையத்தில் விண்ணப்பத்தைப் பூர்த்திசெய்து சமர்ப்பித்தவர்கள் உறுதிப்படுத்தல் (confirmation) இலக்கம் ஒன்றைப் பெறுவார்கள். அந்த உறுதிப்படுத்தல் இலக்கத்தை ஆவணப்பதிவில் வைத்திருத்தல் அவசியமாகின்றது. ஒருவர் ஒரு முறை மாத்திரமே விண்ணப்பத்தை சமர்ப்பிக்கமுடியும் என்பதுடன், இரட்டை அல்லது நகல் விண்ணப்பங்கள் ஏற்றுக்கொள்ளப்படாது.

விண்ணப்பத்தை பூர்த்தி செய்தல் என்பது இந்தத்திட்டத்தின்கீழ் அனுசரணைக்கு விண்ணப்பித்ததாகக் கொள்ளப்படாது. 30 நாட்கள் முடிவில், IRCC 10,000 பேரைத்தெரிவுசெய்து, அவர்களை முழுமையான விண்ணப்பத்தைப் பூர்த்திசெய்யக் கோரும். அனைத்து விண்ணப்பதாரிகளுக்கும் அவர்கள் தெரிவு செய்யப்பட்டுள்ளார்களா, இல்லையா என்பதை IRCC தெரியப்படுத்தும்.

தெரிவு செய்யப்பட்டவர்கள் மாத்திரம் பெற்றோர் மற்றும் பெற்றோரின் பெற்றோர் திட்டத்திற்கான அழைப்பினைப் பெறுவார்கள். அவ்வாறு அழைப்பினைப் பெற்றவர்கள், தமது முழுமையான விண்ணப்பத்தை 90 நாட்களுக்குள் IRCC க்கு சமர்ப்பிக்கமுடியும்.

2017, ஜனவரி 9 ஆம் திகதி விண்ணப்ப வழிகாட்டல்களை (application kit and guide) IRCCயின் இணையத்தளத்தில் பெற்றுக்கொள்ள முடியும். தெரிவுசெய்யப்படாத விண்ணப்பதாரிகள், 2018 ஆம் ஆண்டு மீண்டும் இதே முறையில் தமது விருப்பத்தை தெரியப்படுத்த முடியும்.



# கனடாவில் முதலாவது நாடளாவிய தமிழ் மரபுத்திங்கள்

இந்த மாதம் கனடாரீதியில் மத்திய அரசாங்கத்தின் அங்கீகாரத்துடன் தமிழ்மரபுத்திங்கள் நிகழ்வுகள் இடம்பெறுகின்றன. 2009 ஆம் ஆண்டு முன்னெடுக்கப்பட்ட முயற்சியின் பலனாக 2010 ஆம் ஆண்டு முதல் தமிழ்மரபுத்திங்கள் ரொறன்ரோவிலும் அதனை அண்டிய பகுதிகளிலும் கொண்டாடப்பட்டது. இந்த வருடம் ஏழு ஆண்டுகளுக்கு பின்னர் தமிழ்மரபுத்திங்கள் கனடாவில் நாடளாவியரீதியில் அங்கீகாரம் பெறுகின்றது.

Toronto, Markham, Ajax, Pickering, Brampton மற்றும் Ottawa உட்பட கனடாவின் பிரதான நகரசபைகள் பலவற்றிலும் ஒன்றாரியோ மாகாணசபையிலும் அங்கீகாரம் பெற்ற தமிழ்மரபுத்திங்கள் 2016 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் கனடிய நாடாளுமன்றத்திலும் உத்தியோகபூர்வ அங்கீகாரத்தைப் பெற்றது. இவை தவிரவும் பல கல்விச்சபைகள் ஜனவரி மாதத்தை தமிழ்மரபுத்திங்களாக அங்கீகரித்துள்ளன. இந்த அங்கீகாரத்திற்கு தமிழ் நாடாளுமன்ற உறுப்பினர் கரி ஆனந்தசங்கரி வழிசமைத்தார்.

2017 ஆம் ஆண்டு முதல்தடவையாக நாடளாவிய ரீதியில் கனடாவின் தேசிய அரசாங்கத்தின் அங்கீகாரத்துடன் நடைபெறும் தமிழ்மரபுத்திங்கள் குறித்து தமிழ் பாரம்பரிய மாதத்தின் நிறுவனரும் கனடிய தமிழ்பாரம்பரியச் சமூகத் தலைவருமான நீதன்ஷானிடம் தேசியத்தால் முன்வைக்கப்பட்ட கேள்விகள் ஐந்து

**தேசியம் - தமிழ்மரபுத்திங்கள் ஆரம்பத்தின் போது பிரதான விடயங்களாக எவற்றை கொண்டிருந்தீர்கள்?**

நீதன்ஷான் - முதலாவதாக தமிழ்மரபுத்திங்கள் முயற்சிக்கு கனடா முழுவதிலும் இருந்து ஆதரவு பெறுதல். இரண்டாவதாக புலம்பெயர் தமிழ்மக்கள் வாழும் பிறநகரங்கள் மற்றும் நாடுகளுக்கு இந்த முயற்சிகுறித்த செய்தியை பரப்புதல். இறுதியாக தாயகம் மற்றும் தமிழ்நாட்டிற்கு இடையே இந்தமுயற்சியை பாலமாக்குவது என்பனவே பிரதான மூன்று விடயங்களாக அமைந்திருந்தன.

**தேசியம் - இந்தவருடம் கொண்டாடப்படும் தைமரபுத் திங்களின் முக்கிய அம்சங்களாக எவற்றைக் கூறுவீர்கள்?**

நீதன்ஷான் - கனடிய தேசிய அரசாங்கம் தமிழ் மரபுத் திங்களை அதிகாரப்பூர்வமாக ஏற்றுக்கொண்ட பின்னர் நடைபெறும் முதலாவதுவருட நிகழ்வு இது என்பதால் இந்த வருடம் கனடாவில் தமிழர்கள் வாழும் அனைத்து நகரங்களிலும் அதிகாரப்பூர்வமாக தமிழ் கனடியர்கள் தமிழ் பாரம்பரிய மாதக்கொண்டாட்டங்களில் கலந்து கொள்வர்கள் என நாங்கள் நம்புகிறோம். அதேவேளை கனடாவில் தமிழ்மரபுத்திங்கள் குறித்த நிகழ்வுகளை திட்டமிட்டு ஒருங்கிணைக்கும் தமிழ்மரபுத்திங்கள் சமூகம் (Canadian Tamil Heritage Society) என்ற இலாபநோக்கற்ற அமைப்பு தமிழ்மரபுத் திங்களுடன் தொடர்புடைய அமைப்புக்களுடனான ஆலோசனையின் அடிப்படையில் அடுத்த மூன்று ஆண்டுகளுக்கான கருவை உறுதிப்படுத்தியுள்ளது. இந்தவருடம் விவசாயம். 2018 ஆம் ஆண்டில் புலம்பெயர்ந்த நாடுகளில் வாழ்க்கை மற்றும்



2019ஆம் ஆண்டில் தொல்காப்பியம் என அவை அமையவுள்ளன.

**தேசியம் - தமிழ் மரபுத்திங்களுக்கான தேசிய அரசாங்கத்தின் அங்கீகாரம் எவ்வளவு முக்கியம் வாய்ந்தது?**

நீதன்ஷான் - கனடா தனது 150 ஆவது பிறந்தநாளைக் கொண்டாடும் இந்தவருடம் தமிழ்மரபுத்திங்கள் தேசியரீதியில் அங்கீகாரம் பெற்றது சிறப்புடையது.கனடிய வரலாற்றில் தமிழர்கள் குறுகியகாலத்தில் ஆற்றியுள்ள பங்களிப்பை கொண்டாட இது ஒரு சிறந்த தருணமாகும். அதேவேளை ஒன்ராரியோ மாகாணத்தையும் தாண்டி தமிழர்கள் வாழும் கனடிய நகரங்கள் (குறிப்பாக தமிழர்கள் அதிகளவில் வாழும் மொன்றியல் நகரம்) தமிழ்மரபுத்திங்கள் நிகழ்வுகளில் பங்கேற்பதை இந்த அங்கீகாரம் உறுதிப்படுத்துகின்றது. அதேவேளை FeTNA மூலம் இந்த ஆண்டு ஐரோப்பா மற்றும் அமெரிக்க நகரங்களிலும் தமிழ்மரபுத்திங்களை விரிவாக்கிக் கொள்ள முயற்சிகளை மேற்கொண்டுள்ளோம். கனடிய அரசாங்கத்தின் இந்த அங்கீகாரம் நாடுகளுக்கு இடையேயான தொடர்புமூலம் இந்த விரிவாக்கத்தை மேலும் சாத்தியப்படுத்தியுள்ளது

**தேசியம்- தமிழ் மரபுத்திங்கள் என்ற உங்கள் எண்ணக்கருவை கனடிய தமிழர்கள் ஏற்றுக்கொண்டுள்ளார்கள் என நீங்கள் நம்புகின்றீர்களா?**

நீதன்ஷான் - நிட்சயமாக. தமிழ்மரபுத்திங்கள் என்ற எண்ணக்கரு கனடிய தமிழர்களினால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது. கடந்த வருட நிகழ்வுகள் ஊடாக இதனை அவதானிக்க முடியும். தமிழ்மரபுத்திங்கள் தமிழ்சமூகத்தினர் மத்தியில் பெருமையையும் அங்கீகாரத்தையும் ஏற்படுத்தியுள்ளது. ஆனாலும் இன்னமும் நடைமுறைப்படுத்தவேண்டிய விடயங்கள் பல உள்ளன.

**தேசியம்- தாயகம் மற்றும் தமிழகத்தை நோக்கி தமிழ்மரபுத் திங்கள் நிகழ்வை விரிவுபடுத்துவது குறித்த எண்ணங்கள் உள்ளதா?**

நீதன்ஷான் - தமிழ்பாரம்பரியமாத முன்முயற்சி, தமிழ்நாடு மற்றும் தமிழீழத்தில் இருக்கும் பல முக்கிய பங்குதாரர்களுக்கும் எங்களுக்கும் இடையே வலுவான ஒரு பாலத்தை கட்டியெழுப்பவேண்டும் என்ற அடிப்படையைக் கொண்டது. அதற்கான நகர்வுகள் ஆரம்பிக்கின்றன.



# “கட்சி வெல்வதற்காக தமிழர் தோற்றாலும் பரவாயில்லை” என்கிறோமா நாம்?

“கணபதியும், விநாயகரும் ஒன்றுதான்... ஆனாலும்...”

கனடா மூர்த்தி

Markham Thornhill தொகுதிக்கான ஒன்ராறியோ Progressive Conservative கட்சியின் வேட்பாளர் நியமனத் தேர்தல் நடந்து முடிந்துவிட்டது. PC கட்சியின் நிமால் விநாயகமூர்த்தி ஒரு புறமாகவும், கட்சிக்குப் புதுவரவான லோகன் கணபதி மறுபுறமாகவும் பலப்பரீட்சையில் இறங்கியது உட்கட்சி விவகாரமாக இருக்கலாம். ஆனால் "தேசியம்'' பேசும் தமிழ்க் கனடியராக பார்த்தால் அது அப்படி அல்ல. தேர்தல் முடிந்து முடிவுகள் அறிவிக்கப்பட்டதும், தோற்ற வேட்பாளரான நிமால் விநாயகமூர்த்தியும் வென்றவரான லோகன் கணபதியும் கைகுலுக்கி இனி தாங்கள் ஒரே குடும்பம் என்று சொல்லிவிட்டார்கள். (கணபதியும், விநாயகரும் ஒன்றுதான்...

"லோகன் கணபதியைப் பொறுத்தவரை சண்டை முடிந்துவிட்டது. ஆனால் ஒரு போர்க்களம் 2018 இல் தேர்தல் ரூபத்தில் காத்திருக்கிறது"

ஆனாலும் என்னால் அதை சுலபமாக ஜீரணிக்க முடியவில்லை.) ஒரு ஐந்து மணிநேரத்திற்கு முன்புதான் லோகன் கணபதி தோற்றகடிக்கப்பட வேண்டியவர் என்றோம். பின்பு அவர் வென்றதும் ""we are now one family'' என்று கைகுலுக்கிவிட்டால் எல்லாம் சரியாகிவிட்டதா? இல்லை என்கிறது மனது. அப்படித்தான் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்கிறார்கள் மற்றவர்கள். அவர்கள் கட்சிக்காரர்கள்!

தோற்றுப்போன நிமால் வினாயகமூர்த்தி கடந்த 12 வருடங்களுக்கும் மேலாகக Progressive Conservative கட்சிக்காக உழைத்தவர். இதற்கு மாறாக, களம்பல கண்ட நகரசபை உறுப்பினர் லோகன் கணபதி Liberal கட்சியின் பிரபலங்களில் ஒருவராக கடந்தகாலங்களில் இருந்து, Liberal கட்சி சார்பில் நியமனம் கோரி போட்டியுமிட்டவர். 'தனதுLiberal கட்சியை வெல்லவைக்க மாற்றுக்கட்சியின் தமிழ் வேட்பாளருக்கு எதிராகக் காய் நகர்த்துகிறார்" என ஒருகாலத்தில் எதிர்த்தரப்புத் தமிழ் வேட்பாளர்களின் ஆதரவாளர்களால் கடுமையாகக் குற்றம் சாட்டப்பட்டவர். Conservative கட்சியின் சான் தயாபரன், NDPயின் செந்தி செல்லையா போன்ற வேட்பாளர்களுக்கு எதிராக Liberal கட்சி சார்பில் அவர் இயங்க வேண்டிய தேவை ஏற்பட்டமையும், அந்த நேரத்துக் கட்சி விசுவாசமும் புரிந்துகொள்ளக்கூடியதே.

இதை நாம் புரிந்துகொள்ளும் அதே நேரத்தில், "கட்சிவிசுவாசம்'' என்ற கருதுகோள் தமிழ் நிலைப்பட்டு நம்முள் ஒருவித குழப்ப நிலைக்கும் உள்ளாகிறது. ஒரு கட்சியிலிருக்கும் தமிழர், தான் சார்ந்து நிற்கும் கட்சிவெல்ல வேண்டும் என்பதற்காக "போட்டியில் நிற்கும் ஏனைய தமிழ் வேட்பாளர்கள் தோற்றாலும் பரவாயில்லை" என மாற்று இனத்தவரை ஆதரித்து நிற்பது சரியா? சரி என்றால் Liberal கட்சியில் இருந்தபோது Liberal கட்சியின் வெற்றிக்காக அதன் அங்கத்தவராயிருந்த லோகன் கணபதி அன்று செய்தது சரியே ஆகும். அதை யாரும் விமர்சிக்க முடியாது.

இதே போன்றதொரு தமிழ் நிலைச்சிக்கல் Scarborough Rouge River இடைத்தேர்தலின்போதும் வந்தது. இங்குஒரு தமிழ் வேட்பாளரை களம் இறக்கி அந்தத் தமிழரை வெல்ல வைப்பதற்குப் பதிலாக Raymond Choவை PC கட்சியினர் தேர்ந்தெடுத்தமைதான் அந்தச் சிக்கல். அந்த நேரத்தில் "பிரகல்திரு வெல்லக்கூடாது", 'நீதன்சான் வெல்லக்கூடாது" என்ற ரகசிய தமிழ் நினைப்புக்களின் மத்தியில் பற்பல சமாளிப்புக்கேசன் விளக்கங்களும் PC கட்சியின் "கழுத்து''ப்பகுதியில் இருந்து தரப்பட்டன. (தலைக்குக் கீழே இருப்பது கழுத்துத்தானே!) இதில் "கட்சிக்கான வெற்றி இந்த இடைத்தேர்தலில் அவசியம். எனவே தமிழ் மக்களே... இம்முறை பொறுத்துக் கொள்ளுங்கோ... 2018 இல் தமிழர்கள் அதிகம் வாழும் தொகுதிகளில் தமிழர்களையே போட்டியிட வைப்போம்" என்ற கோசம் வேறு.

ஆனால் நடந்தது என்ன? Rouge River தேர்தலுக்கு அடுத்து வந்த, தமிழர்கள் அதிகமாக வாழும் இன்னொரு Markham Stouffville தொகுதிக்கான உட்கட்சித் தேர்தலில் எந்தத் தமிழரையும் நிறுத்த வேண்டாம் என்று கட்சியின் "கழுத்து'' சொல்லிவிட்டது. அதனால் Markham Stouffville தொகுதியில் Paul Calandra என்ற இத்தாலிய கனேடியருக்கான நியமனத்தை தலையும் கழுத்தும் ஆதரித்து நின்றன. தமிழ்ப்பிரதிநிதித்துவம் அங்கு காலால் மிதிக்கப்பட்டது. இதை அப்போதும் - பிறகும் - யாரும் கேள்வி கேட்கவில்லை.

இதனை ஒரு பக்கத்தில் வைத்துவிட்டு, "Raymond Choவை Rouge Riverரில் வேட்பாளராகக் கொண்டு வந்ததற்கான அடிப்படைக் காரணம் என்னவாக இருக்கும்?" என்று யோசித்துப் பாருங்கள். பதில் சுலபமானது. "Raymond Cho என்ற தனிமனிதன் ஆட்களைத் திரட்டக்கூடியவர் - ஆகவே அவரின் முதுகில் ஏறி நின்று கட்சியை வெல்லவைப்போம்" என்பது தான் அதற்குக் காரணம். கட்சிப்பற்று அல்ல. அதைப் போன்ற காய் நகர்த்தல் தான் இப்போது Markham Thornhill தொகுதியிலும் நடந்தது.

இதை யாராவது மறுக்கட்டும் பார்ப்போம்:






"Liberal கட்சியில் இருக்கும் லோகன் கணபதி ஆட்களை கொண்டு வரக்கூடியவர்!"

நியமனத் தேர்தல்களில் ஆட்களை இழுத்துக் கொண்டு வந்து வாக்களிக்க வைப்பது ஒரு கலை மட்டுமல்ல அது ஒரு அவசரகால நியதியும்கூட. அதை சரிவரச் செய்யாததால் தான் Markham Thornhill நியமனத் தேர்தலில் நிமால் வினாயகமூர்த்தி தோல்வியைத் தழுவிக்கொண்டார்.ஆனால் பிரமித்து போக வைக்கும் அளவில் லோகன் கணபதியின் "ஆட்கள்'' அதைச் செய்துகாட்டினர். பேரூந்துகளில் முதியவர்கள் அழைத்து வரப்பட்டனர். ஒரு மருத்துவமனைக்கு வைத்தியரைப் பார்க்க வருவது போன்ற தவிப்புடன் வேறு பலர் வாக்களிப்பு நிலையத்திற்கு வந்து லோகனுக்கு வாக்களித்தனர். பலரையும் ஒரு டொக்டரே பரிவுடன் அழைத்துச் சென்று வாக்களிக்க வைத்ததையும் கண்டேன். ஆனாலும் 3,621 அங்கத்துவர்களை மிகவும் குறுகிய ஒரு காலத்திற்குள் திரட்டிய லோகன் கணபதிக்கு அவர் திரட்டிய அங்கத்தவர்களிலிருந்து 73.2 சதவிகிதத்தினர் வாக்களிக்க வரவில்லை என்பதும் இங்கு கவனிக்கத்தக்கது.

"
இதை யாராவது மறுக்கட்டும் பார்ப்போம்: "Liberal கட்சியில் இருக்கும் லோகன் கணபதி ஆட்களை கொண்டுவரக்கூடியவர்!"

நிமால் வினாயகமூர்த்தி 450 வாக்குகள் வித்தியாசத்தில்தான் தோல்வியைத் தழுவினார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது. "Conservative நிமாலை ஓடவிடாமல் நிப்பாட்டப் போகுது", "நிமாலை வேற இடத்துக்குmove பண்ணிப் போகச்சொல்லி PC சொல்லிற்ருது", "நிமால் நாடுகடந்த தமிழீழ அரசாங்கத்தில் இருக்கிறதால PC அவரை ஏற்றுக்கொள்ளாது", "டக்ளஸ் தேவானந்தா காசு குடுத்துத்தான் நிமால் செலவழிக்கிறான்", "Patrick க்கு எதிரான ஆக்களோட (Doug Ford) நிமால் சேந்து நிக்கிறான்" என்ற வகையான எதிர்மறை பொய்க் கருத்துக்கள் கட்சியின் கழுத்துக்களால் பரப்பப்பட்ட நிலையிலும் சோர்ந்து போகாமல் ஒரு வேட்பாளர் தேர்தல்களத்தில் நிற்கவேண்டி இருக்கிறது.

எந்தக் கட்சியாக இருந்தாலும் இவ்வகை எதிர்மறைப் பிரச்சாரங்களின் உளவியல் பிறழ்வு தமிழ் நிலைப்பட்டதொரு ஆய்வுக்கு உட்படுத்தப்பட வேண்டும். இவை ஒருபுறமிருக்க...

லோகன் கணபதியைப் பொறுத்தவரை சண்டை முடிந்துவிட்டது. ஆனால் ஒரு போர்க்களம் 2018 இல் தேர்தல் ரூபத்தில் காத்திருக்கிறது.தேர்தலில் லோகனை எதிர்த்துப் போட்டியிடப் போகின்ற Michael Chan முன்பு லோகனோடு Liberal கட்சி சகாவாக இணைந்து பணியாற்றியவர்.(அதனால் தானோ என்னவோ தமிழர்களில் பலரும் Michael Chan னுக்கு ஆதரவு தருபவர்களாக இருந்ததை கடந்த மாநிலத் தேர்தலில் நான் கண்டிருக்கிறேன்.)போதாக்குறைக்கு லோகன் போலவே களம்பல கண்டவர் Michael Chan. ஆட்களைத் திரட்டிக்கொண்டு வந்து வாக்களிக்க வைப்பதிலும் வல்லவர். அந்தவகையில் Michael Chanனும் லோகன் போலவே பல தேர்தல் நெளிவு சுழிவுகளை புரிந்து வைத்திருக்கக்கூடும். ஆக, இவையும் ஒருபுறமிருக்க...

"லோகன் ஒரு தமிழர்.. ஆகவே சீனருக்கு வாக்களிக்காமல் லோகனுக்கு வாக்களியுங்கள்" என்ற ஒட்டுமொத்தப் பிரச்சாரம் செய்வதில் தான் ஒரு பெரும் சிக்கலை Conservative கட்சி இப்போது தமிழுக்கான "தேசியம்'' பேச விரும்பும் தமிழரான நமக்கு ஏற்படுத்திவிட்டது. அன்று கட்சித் தலைமையைக் கைப்பற்றகச் Patrick Brown தமிழ்மக்கள் ஆதரவை வேண்டி நின்றபோது கட்சி சார்பற்ற நிலையில் தமிழ்மக்கள் அவரை "எங்கவீட்டுப்பிள்ளை'' அளவிற்குப் போய் வாக்களித்துத் தேர்ந்தெடுத்தார்கள். ஆனால் Rouge Riverரில் "கட்சியே பெரிது.. அதனால் Raymond Cho க்கு வாக்களியுங்கள்" என்று தமிழ் Conservative ஆதரவாளர்கள் தமிழ் மக்களிடம் கேட்டு தமிழ் நிலைப்பட்ட வகையில் தவறானதொரு நிலைப்பாட்டை எடுத்துவிட்டார்கள்.இதையே உதாரணமாக எடுத்து, 2018இல் Liberal கட்சியினரும் "கட்சியேபெரிது. ஆகவே Michael Chanனுக்கே வாக்களியுங்கள்" என்று Markham Thornhill தொகுதித் தமிழரைக் கேட்டால் என்ன செய்வது? லோகனால் வளர்க்கப்பட்ட Liberal ஆதரவுத் தமிழர்கள் Liberal கட்சிக்காக(Michael Chanனுக்கு) வாக்களிக்க வேண்டி வருமே?!

"கட்சி வெல்வதற்காக தமிழர் தோற்றாலும் பரவாயில்லை" என்ற Rouge River தமிழ் அனுபவம் Markham Thornhill தொகுதியில் அனைத்துத் தமிழர்களுக்கும் ஒரு சிக்கலான நிலையை தொடர்ச்சியாக உருவாக்கிவிட்டிருக்கிறது.



# 2010 ஸ்காபுரோவில் கொலை 2016 மலேசியாவில் கைது

பத்மன் பத்மநாதன்

"

**சேரன் காசிலிங்கத்தின் கைதுக்காக கனடாரீதியிலான பிடியாணை பிறப்பிக்கப்பட்டது. விபத்து என்ற கோணத்தில் காவல்துறையினரில் விசாரணைகள் ஆரம்பித்தன இது ஒரு கொலை என்பதைக் கண்டறிவதற்கும் இந்தக் கொலைக்கு காரணமானவர் சேரன் காசிலிங்கம் என்பதை உறுதிப்படுத்துவதற்கும் வெகுநேரம் எடுக்கவில்லை.**

ஆறு வருடங்களுக்கு முன்னர் ஸ்காபுரோவில் நிகழ்ந்த கொலை குறித்த குற்றச்சாட்டில் நாடளாவிய ரீதியில் தேடப்பட்டு வந்த குற்றவாளியான தமிழர் மலேசியாவில் கைது செய்யப்பட்டு தன்மீதான குற்றச்சாட்டை எதிர்கொள்வதற்காக கனடாவுக்கு நாடு கடத்தப்பட்ட நிகழ்ந்துள்ளது.

2010 ஆம் ஆண்டு 25 வயதான நந்தி ஈசன் தர்மரட்ணம் என்ற இளைஞர் வாகனம் ஒன்றினால் மோதப்பட்டு மரணமடைந்தார். 28 வயதான சேரன் காசிலிங்கம் (குட்டி சான்) என்ற இளைஞர் இந்தக் கொலையுடன் தொடர்புடைய குற்றவாளியாக மரணம் நிகழ்ந்த சில மணிநேரத்தில் அடையாளம் காணப்பட்டு அவரது கைதுக்கான பிடியாணை காவல்துறையினரால் பிறப்பிக்கப்பட்டது.

இரண்டாம்தர கொலைக் குற்றச்சாட்டில் கடந்த ஆறு வருடங்களாக தேடப்பட்ட சேரன் காசிலிங்கம் மலேசியாவின் கோலாலம்பூரில் மறைந்திருப்பதை றொறன்ரோ காவல்துறையினர் மோப்பம் பிடித்தனர். மலேசிய காவல் துறையினரின் உதவியுடன் கடந்த ஆகஸ்ட் மாதம் 26 ஆம் திகதி சேரன் காசிலிங்கம் கைது செய்யப்பட்டு கனடாவுக்கு நாடுகடத்தப்பட்டுள்ளார். இந்த நாடு கடத்தலில் கனடிய RCMP யின் மலேசியாப் பிரிவும் கனடிய எல்லைச் சேவைகள் பிரிவும் (Canadian Border Services Agency) உதவியுள்ளது.

மார்ச் மாதம் 13ம் திகதி 2010ம் ஆண்டு சனிக்கிழமை அதிகாலை 3:11 மணியளவில் அவசர உதவிப் பிரிவினருக்கு விடுக்கப்பட்டது அந்தத் தொலைபேசி அழைப்பு. வாகன விபத்தில் ஒருவர் காயமடைந்த நிலையில் சாரதி சம்பவ இடத்திலிருந்து தப்பிச் சென்றுள்ளார் என்ற அடிப்படையில் முதலில் தகவல் வழங்கப்பட்டது. சம்பவ இடமான 1641 Pharmacy வீதியில் அமைந்துள்ள Terraview கல்வியகத்தின் பின்புறம் அமைந்துள்ள வாகனத்தரிப்பிடத்திற்கு விரைந்த அவசரப் பிரிவினர் நந்திஈசன் தர்மரட்ணத்தை சடலமாக மீட்டனர். விபத்து என்ற கோணத்தில் காவல் துறையினரில் விசாரணைகள் ஆரம்பித்தன. சம்பவ இடத்தில் நின்றிருந்த



நந்திஈசன் தர்மரட்ணத்தின் நண்பர்கள் உட்பட பலரையும் விசாரணைக்கு உட்படுத்திய காவல்துறையினருக்கு இது ஒரு கொலை என்பதைக் கண்டறிவதற்கும் இந்தக் கொலைக்கு காரணமானவர் சேரன் காசிலிங்கம் என்பதை உறுதிப்படுத்து வதற்கும் வெகுநேரம் எடுக்கவில்லை.

சம்பவ இடத்திற்கு முதலில் நந்திஈசன் தர்மரட்ணம் தனது வாகனத்தில் சென்றுள்ளார். வாகனத்தரிப்பிடத்தில் தனது இருநண்பர்களுடன் உரையாடிக் கொண்டிருக்கையில் சேரன்காசிலிங்கம் தனது வாகனத்தில் அங்கு சென்றார். இவர்கள் இருவருக்கும் இடையில் வாய்த்தர்க்கம் ஏற்பட்ட நிலையில் சேரன் காசிலிங்கம் தனது வாகனத்தினால் நந்திஈசன் தர்மரட்ணத்தை மோதிவிட்டு சம்பவ இடத்தை விட்டு தப்பிச் சென்றுள்ளார். தலையில் ஏற்பட்ட பலத்த காயத்தால் நந்திஈசன் தர்மரட்ணத்தின் மரணம் நிகழ்ந்ததாக பிரேதப்பரிசோதனை அறிக்கை சுட்டிக் காட்டியது. அன்று முதல் தேடப்பட்டு வந்த நிலையில் சேரன் காசிலிங்கத்தின் கைதுக்காக கனடா ரீதியிலான பிடியாணை பிறப்பிக்கப்பட்டது.

இந்தக் கொலைக்கு சேரன் காசிலிங்கம் செலுத்திச் சென்ற வாகனம் உபயோகிக்கப்பட்டதாக காவல்துறையினர் அறிவித்தனர். கைவிடப்பட்ட நிலையில் இந்த வாகனம் சில தினங்களுக்கு பின்னர் றொறன்ரோ மேற்குப்பகுதியில் அடையாள இலக்கம் இல்லாத நிலையில் கண்டுபிடிக்கப்பட்டது.

பலியான நந்திஈசன் தர்மரட்ணம் 1985ம் ஆண்டு ஜனவரி மாதம் 17ம்திகதி பிறந்தவர். Ryerson பல்கலைக்கழகத்தின் முன்னாள் மாணவரான இவர் வியாபாரத் துறையில் கல்வி கற்றவர். கொலை நிகழ்ந்த இடத்தில் இவரது பல்கலைக்கழக அடையாள அட்டை மீட்கப்பட்டது. சேரன் காசிலிங்கம் ஏற்கனவே காவல் துறையினரால் அறியப்பட்டவர். கொலை செய்யப்பட்ட நந்திஈசன் தர்மரட்ணத்திற்கும் குற்றவாளியாக தேடப்பட்டு வந்தசேரன் காசிலிங்கத்திற்கும் இடையில் ஏற்கனவே அறிமுகம் உள்ளதாக காவல் துறையினர் தகவல் வெளியிட்டிருந்த போதிலும் இவர்களுக்குள் இருந்த தொடர்பு குறித்து தகவல்கள் வெளியாகவில்லை.

இரண்டாம்தரக் கொலைக் குற்றச்சாட்டில் கைது செய்யப் பட்டுள்ள சேரன் காசிலிங்கம் மீதான குற்றச்சாட்டு க்கள் நீதிமன்றத்தில் நிரூபிக்கப்படவில்லை. குற்றங்கள் நிரூபிக்கப்படும்வரை கனடிய சட்டத்தின் பிரகாரம் அவர் நிரபராதியாகவே கருதப்படுவார்.

# ரொறன்ரோவுக்கு கிடைப்பாரா முதலாவது தமிழ் நகரசபை உறுப்பினர் ?



ரொறன்ரோ நகரசபைக்கு முதலாவது தமிழர் உறுப்பினர் தேர்த்தெடுக்கப்படுவாரா என்ற கேள்வியுடன் வெற்றிடமாகியுள்ள Ward 42க்கான (Scarborough Rouge River) நகரசபை உறுப்பினருக்கான இடைத்தேர்தலை எதிர்கொள்கின்றோம்.

2016 ஆம் ஆண்டு September மாதம் நடைபெற்ற மாகாணச பைத் தேர்தலில் Ontario PC கட்சியின் சாப்பில் Raymond Cho வெற்றிபெற்றதைத் தொடர்ந்து அவர் பல ஆண்டுகாலமாக வகித்து வந்த நகரசபை உறுப்பினர் பதவி வெற்றிடமானது. தற்போது இடைத்தேர்தல் திகதியாக February மாதம் 13ஆம் திகதி (திங்கட்கிழமை) அறிவிக்கப்பட்டுள்ளது. முன்கூட்டிய வாக்குப்பதிவுகள் February மாதம் 4ஆம் திகதி (சனிக்கிழமை) 5ஆம் திகதி (ஞாயிற்றுக்கிழமை) நிகழவுள்ளன.

இடைத்தேர்தலுக்கான வேட்புமனுத்தாக்கலுக்கான நேரம் டிசம்பர் மாதம் 30 ஆம் திகதி வெள்ளிக்கிழமையுடன் முடிவடைந்துள்ள நிலையில் ஐந்து தமிழ் வேட்பாளர்கள் உட்பட மொத்தம் 31 பேர் இந்த இடைத்தேர்தலில் போட்டியிட தமது பெயர்களைப் பதிவு செய்திருந்தனர். இவர்களில் ஒரு தமிழ் வேட்பாளரின் வேட்புமனு நிராகரிக்கப்பட்டுள்ளது.

2014 ஆம் ஆண்டு நடைபெற்ற நகரசபைத் தேர்தலில் மார்க்கம் நகரில் ஐந்தாவது தொகுதியில் நகரசபை உறுப்பினர் வேட்பாளராக போட்டியிட்ட சிவாசிவஞானம் தேர்தலுக்கான தனது செலவீனங்களை தேர்தல் சட்டத்திற்கு அமைவாக சமர்ப்பிக்கவில்லை என்ற அடிப்படையில் அவரது வேட்புமனுவை தேர்தல் ஆணையாளர் டிசம்பர் மாதம் 6ஆம் திகதி நிராகரித்துள்ளார். இதேவேளை இந்தத் தேர்தலில் போட்டியிடும் எண்ணத்தில் வேட்புமனுத்தாக்கல் செய்த நீ தன்சபா தனது வேட்பு மனுவை டிசம்பர் மாதம் 21 ஆம் திகதி மீளப்பெற்றுள்ளார். இவ்வாறான பின்னணிகளின் இறுதியில் மூன்று தமிழ் வேட்பாளர்கள் (கேமிகணெஷதாசன், நீதன்ஷான் மற்றும் பஞ்செ ாக்கலிங்கம்) உட்பட மொத்தம் 29 பேர் போட் டிக்களத்தில் தற்போது உள்ளனர்.

தமிழ் வேட்பாளர்களில் கேமிகணெஷதாசன் தொழில்துறையில் ஒரு வழக்கறிஞராவார். தேர்தலில் போட்டியிடுவது இவருக்கு புதிதல்ல. 2012 ஆம் ஆண்டு ரொறன்ரோ கல்விச்ச பைக்காக 20ஆவதுதொகுதியில் நடைபெற்ற இடைத்தேர்தலில் போட்டியிட்ட அனுபவம் கொண்டவர். நீதன்ஷான் தற்போதுஇந்தத் தொகுதியில் ரொறன்ரோ கல்விச்சபை உறுப்பினராக பதவிவகிக்கின்றார். முன்னர் இதேதொகுதியில் நகரசபை உறுப்பினர் பதவிக்கும் மாகாணசபை உறுப்பினர் பதவிக்கும் போட்டியிட்டவர்.

ஏற்கனவே யோர்க் பிராந்திய சபையில் கல்விச்சபை உறுப்பினராக பதவிவகித்த அனுபவம் கொண்டவர். பஞ்சொக்கலிங்கம் தேர்தல்களத்திற்கு புதியவர்.வீடு விற்பனைத்துறையில் பல ஆண்டுகாலம் அனுபவம் பெற்ற இவர் எதிர்கொள்ளும் முதலாவது தேர்தல் இதுவாகும்.

ஏற்கனவே ரொறன்ரோ நகரசபைத் தேர்தல்களில் பல தமிழர்கள் வேட்பாளர்களாக நகரசபை உறுப்பினர் பதவிக்கு போட்டியிட்ட போதிலும் எவரும் வெற்றிக்கனியை எட்டவில்லை. இந்த நிலையை நடைபெறப்போகும் இடைத்தேர்தல் மாற்றுமா?

இந்த இடைத் தேர்தலில் போட்டியிடும் மூன்று தமிழ் வேட்பாளர்களையும் தேசியம் தொடர்பு கொண்டது. அவர்களது பேட்டி அடுத்த மூன்று பக்கங்களிலும்



VOTE
Councillor Ward 42
Scarborough - Rouge River
Election Monday, February 13, 2017
Advance voting Saturday February 4 & Sunday February 5, 2017.



# நகரசபை உறுப்பினருக்கான இடைத்தேர்தல் வேட்பாளர் கேமி கணேஷதாசன்

**தேசியம்: 42 ஆவது தொகுதி வாக்காளர்கள் ஏன் உங்களுக்கு வாக்களிக்கவேண்டும்?**

கேமி கணேஷதாசன்: நான் நீண்டகாலமாக இந்தத் தொகுதியில் வசித்து வருகின்றேன். இதனால் இந்தத் தொகுதிவாசிகள் எதிர்கொள்ளும் சவால்களை நன்கு அறிவேன். எனது கல்வித்தராதரம், அனுபவம் என்பன என்னை ஒரு சிறந்த நகரசபை உறுப்பினராக செயல்பட உதவும் என நம்புகின்றேன்.

**தேசியம்: இந்தத் தொகுதியின் வாக்காளர்கள் எதிர்கொள்ளும் பிரதான சவால்கள் எவை?**

கேமி கணேஷதாசன்: இந்தத் தொகுதி வாக்காளர்களினால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் தமது பதவிக்காலம் முடிவடைய முன்னர் வேறொரு பதவிக்காக போட்டியிடுவது இந்தத்தொகுதி எதிர்கொள்ளும் பிரதான சவாலாகும். புதிதாக தாம் போட்டியிடும் பதவியில் வெற்றி பெற்றால் தாம் வகித்து வரும் பதவியை கைவிடுவது இங்கு நடைபெறுகின்றது. இது அவர்களை தேர்ந்தெடுத்த மக்களுக்கும் நியாயமற்றது.அதேவேளை இடைத்தேர்தல் உட்பட்ட செலவீனங்களுக்கு மேலதிகமாக பணம் விரையமும் ஏற்படுகின்றது. மேலும் இந்தத் தொகுதியின் பாதுகாப்பை அதிகரிக்க, இளைஞர்களுக்கு தகுந்த வேலை வாய்ப்புகளுக்கு உதவுவதுடன் தொழில் சார்ந்த பயிற்சியளிக்க முயற்சி எடுப்பேன்.

**தேசியம்: இந்தப் பதவிக்கான சிறந்த வேட்பாளராக ஏன் நீங்கள் அமைகின்றீர்கள்?**

கேமி கணேஷதாசன்: ஏற்கனவே குறிப்பிட்டதைப் போல் நான் இந்தத் தொகுதியில் நீண்டகாலம் வாழ்ந்துவருகின்றேன். தொழில் முறையில் ஒரு சட்டத்தரணியாக பணியாற்றும் நான் இந்தத் தொகுதி மக்களின் குரலாக இருப்பேன். என்னுடைய தெற்காசிய பின்னணி இந்தத் தொகுதியின் வாக்காளர்களும் குறிப்பாக சிறுபான்மை இனத்தவர்களும் எதிர்கொள்ளும் சவால்களைப் புரிந்துகொள்ள உதவுகின்றது. தமிழ், ஆங்கிலம் மற்றும் இந்தி மொழிகளின் மீதான புலமையும் என்னை தனித்துவமான ஒரு வேட்பாளராக நிலைநிறுத்தும் என நம்புகின்றேன்.

> "இந்தத் தொகுதி வாக்காளர்களினால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் தமது பதவிக் காலம் முடிவடையமுன்னர் வேறொரு பதவிக்காக போட்டியிடுவது இந்தத் தொகுதி எதிர்கொள்ளும் பிரதான சவாலாகும்"



# நகரசபை உறுப்பினருக்கான இடைத்தேர்தல் வேட்பாளர் நீதன் ஷான்

**தேசியம் :42 ஆவது தொகுதி வாக்காளர்கள் ஏன் உங்களுக்கு வாக்களிக்கவேண்டும்?**

நீதன் ஷான்: கடந்த 16 வருடங்களாக இந்தத் தொகுதியில் தொடர்ந்தும் சேவையாற்றும் அனுபவம் எனக்கு உள்ளது. இந்தத் தொகுதியில் தொடர்ந்து இயங்கிக்கொண்டிருக்கும் பல இளைஞர் திட்டங்களை ஆரம்பித்துள்ளேன். 5 வருடங்கள் கல்விச்சபை உறுப்பினராக கடமையாற்றிய அனுபவம் உள்ளது. சிறந்த முடிவுகளை வழங்கக்கூடிய வகையில் எனது செயல்திட்டங்கள் அமைந்துள்ளன. ஒடுக்கப்படும் மக்களுக்காக குரக்கொடுக்க வல்லவர் ஒருவர்தான் இந்தத்தொகுதிக்குத் தேவை. இது நானாக இருக்கமுடியும் என நம்புகின்றேன்

**தேசியம்: இந்தத் தொகுதியின் வாக்காளர்கள் எதிர்கொள்ளும் பிரதான சவால்கள் எவை?**

நீதன் ஷான்: அனைத்து தரப்பினருக்குமான சிறந்த போக்குவரத்து மற்றும் அனைத்து வயதினருக்குமான சனசமூக நிலையங்கள் மற்றும் நூலகங்களின் சேவைகள் இந்தத் தொகுதியின் பிரதான தேவைகளில்ஒன்றாக உள்ளது. இதேவேளை இளம் வயதினருக்கும், சர்வதேச ரீதியில் பயிற்சி பெற்ற நிபுணர்களுக்குமான உள்ளூர் தொழில்வாய்ப்புக்களும் அவசியமாகின்றது. வணிக முன்னேற்றபகுதி ஊடாக சிறிய வணிக முயற்சிகளுக்கு மேலதிக உதவிகள் வழங்குவதன் மூலம் இந்தத் தொகுதியில் சிறந்த பொருளாதார வளர்ச்சியை ஏற்படுத்த முடியம்..கட்டுப்பாடான விலைகளில் குழந்தைபராமரிப்பு நிலையங்கள், சுத்தமான மற்றும் பாதுகாப்பான சூழல் என்பனவும் இந்தத் தொகுதி வாக்காளர்களின் தேவைகளாக உள்ளன.

**தேசியம்: பல தேர்தல்களில் போட்டியிடுபவர் என்ற உங்கள் மீதான குற்றச்சாட்டு உங்களுக்கு எதிரான ஒரு பிரச்சாரமாக இந்தத் தேர்தலில் அமையுமா?**

நீதன் ஷான்: Scarborough Rouge River வாக்காளர்களும் தமிழ் மக்ககளும் என்னை நன்கே அறிந்தவர்கள். எந்த நிலையிலும் கடுமையான செயற்பாடுகள் ஊடாக சிறந்த முடிவுகளை குறியாகக் கொண்டு எனது நகர்வுகள் இது வரை காலமும் இடம்பெற்றுள்ளன. நான் ஒரு தேர்வு செய்யப்பட்டுள்ள உறுப்பினராகஇருந்த காலத்திலும் இல்லாத காலங்களிலும் சமூகத்திற்கான சேவை செய்துள்ளேன். கடந்த காலங்களில் கடுமையான போட்டியாளர்களை எதிர்த்து நான் தேர்தல்களை எதிர்கொண்டுள்ளேன். இதனால்தான் தமிழர்கள் மத்தியில் இருந்து தெரிவுசெய்யப்பட்ட முதலாவது உறுப்பினர் என்ற பெருமையையும் மிக இளம் வயதில் தெரிவான உறுப்பினர் என்ற பெருமையையும் என்னால் பெறமுடிந்தது. கனடாவில் தமிழர்கள் மத்தியில் முதலாவதாக ஒரு அரசியல் கட்சியின் தலைவராக தெரிவுசெய்யப்பட்டுள்ளேன். புதிய ஜனநாயகக் கட்சியின் மிக குறைந்த வயது கொண்ட தலைவரும் நானே. இவ்வாறான பின்னணியில் எனது சேவையை அறிந்த மக்கள் என்னை ஆதரிப்பார்கள் என்ற நம்பிக்கை உள்ளது.

> "பல தேர்தல்களில் போட்டியிடுபவர் என்ற உங்கள் மீதான குற்றச்சாட்டு உங்களுக்கு எதிரான ஒரு பிரச்சாரமாக இந்தத் தேர்தலில் அமையுமா?"




# நகரசபை உறுப்பினருக்கான இடைத்தேர்தல் வேட்பாளர் பஞ் சொக்கலிங்கம்

**தேசியம் : 42 ஆவது தொகுதி வாக்காளர்கள் ஏன் உங்களுக்கு வாக்களிக்கவேண்டும்?**

பஞ் சொக்கலிங்கம்: இன்று இந்தவட்டாரத்தில் மாநகரசபை மூலம் முன்னெடுக்கப்பட வேண்டிய பல்வேறு விடயங்கள் உள்ளன. அவற்றை உண்மையான பொதுநலத்தோடு முன்னெடுக்க வேண்டுமாயின் அந்த மக்களை நன்கு அறிந்த, மக்கள் நலனில் அக்கறை கொண்ட, மக்களுக்கு நன்கு பரிச்சயமான ஒருவர் நகரசபை உறுப்பினராக தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அத்தகைய தகமைகளைக் கொண்ட வேட்பாளராக நான் இருக்கிறேன். இந்தப் பிரதேசத்தில் கடந்த இருபது வருடங்களாக ஒவ்வொரு மக்களின் இன்ப துன்பங்களில் பங்கெடுப்பவனாக, மக்களுக்கு உதவி செய்பவனாக வாழும் நிலை எனக்குக் கிடைத்திருக்கிறது. இது எந்த வேட்பாளருக்கும் கிடைக்காத எனது தனித்துவம் என்று சொல்லிக் கொள்வதில் நான் மிகவும் பெருமையடைகிறேன். நான் மக்களுக்குஉண்மையாக சேவை செய்ய விரும்புகிறேன். அதை என்னால் எவ்வித குறையுமின்றி நிறைவேற்ற முடியுமென முழுமையாக நம்புகிறேன். இதனை இந்தப் பிரதேசமக்கள் நன்கு அறிவார்கள். எனவே அந்த மக்கள் என்னைத் தெரிவு செய்வதன் மூலம் மிகப்பெரிய செயற்பாட்டினை இந்தத் தொகுதியில் நிகழ்த்துவதற்கான சூழலை ஏற்படுத்தலாம்.

**தேசியம்: இந்தத் தொகுதியின் வாக்காளர்கள் எதிர்கொள்ளும் பிரதான சவால்கள் எவை?**

பஞ் சொக்கலிங்கம்: பொதுப்போக்குவரத்துச்சேவை எமது பிரதேசமக்களுக்கான அத்தியாவசியச் சேவைகளில் முதலிடத்தை வகிக்கிறது. வாகனம், நேரம் மற்றும் சுற்றுப்புறச்சூழல் எனப்பல்வேறு சிக்கல்களினால் ஏற்படும் இடர்களைகளையப் பொதுப் போக்குவரத்துச்சேவை மேம்படுத்தப்பட வேண்டியுள்ளது. ஸ்காபுரோகிழக்கு வாழ் மக்களுக்கான subway விஸ்தரிக்கப்படவேண்டும். இதன் மூலம் மக்களுக்கான போக்குவரத்து வலைப்பின்னல் துரிதகதியில் இணைவதற்கான வாய்ப்பு ஏற்படுகிறது. எமது பிரதேச இளைஞர்களுக்கான வேலை வாய்ப்பும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியது. இந்தவிடயத்தில் நகர அரசுகள் மத்திய மற்றும் மாகாண அரசுகளுடன் இணைந்து பங்காற்ற வேண்டிய தேவையுள்ளது. இதைக்களைவதற்கான பணியில் நகரசபைகளின் அதிகாரங்கள் மட்டுப்படுத்தப்பட்டிருப்பினும் அது குறித்த அக்கறையை மேலும் முன்னெடுக்க நாம் கடுமையாக உழைக்க வேண்டியுள்ளது.

**தேசியம்: தேர்தலில் போட்டியிடும் உங்களது முயற்சியின் பின்னணியில் உங்களது வியாபாரத்தை அதிகரிக்கும் உள் நோக்கம் உள்ளதென்ற குற்றச்சாட்டொன்று உள்ளதே?**

பஞ் சொக்கலிங்கம்: இதை நான் முற்றாக மறுதலிக்கின்றேன். இந்தத் தேர்தல் பணிகளுக்காக நான் செலவிடும் நேரம், பணம், உழைப்பு ஆகியவற்றை எனது தொழிலுக்காக செலவிட்டால் எனது தொழிலை பல மடங்கு மேம்படுத்த முடியும் . நான் உண்மையில் இந்தப் பணியை மனதார நேசிக்கின்றேன். எத்தனை வர்த்தகர்கள், பணம் படைத்தவர்கள் வட அமெரிக்க அரசியலில் வெற்றியீட்டி நிறைவான பணிகளை மக்களுக்கு அளிக்கிறார்கள் என்பதை நினைத்துப் பாருங்கள். இந்தத் தொகுதியில் மக்கள் பலரும் என்னை போட்டியிடுமாறு வேண்டுகோள் விடுத்தமையையும் இந்தச் சந்தர்ப்பத்திலே நான் சுட்டிக்காட்ட விழைகின்றேன். வதந்திகளை நம்பாதீர்கள். உண்மையைக் கண்டு கொள்ளுங்கள்.

> "வதந்திகளை நம்பாதீர்கள். உண்மையைக் கண்டு கொள்ளுங்கள்"



# முதல்வர் விக்னேஸ்வரனின் கனடா வருகை சர்ச்சையில் !

நடராஜா முரளிதரன்

தாராளவாத ஜனநாயகம் நிலைபெறும் நாடுகள் பலவற்றில் கிராமங்கள், நகரங்கள் மற்றும் மாநகரங்கள் ஒரு கட்டமாகவும் மாநிலங்கள் (அல்லது மாகாணங்கள்) மறுகட்டமாகவும், முழு நாடும் மூன்றாவது கட்டமாகவும் அதிகாரப்பரவலாக்கல் சட்ட முறைமைகளுக்கு ஊடாக அதிகாரங்கள் பிரித்துக் கையளிக்கப்பட்டிருக்கும். இந்த மூன்று மட்டங்களுக்கும் பகிர்ந்தளிக்கப்பட்ட அதிகார அலகுகளில் அதற்குமேலாக அமைந்துள்ள அதிகார அமைப்புகளோ அல்லது அரச அமைப்புகளோ தலையிடுவதில்லை.

இப்போது கனடியத் தமிழர்கள் மத்தியில் பேசப்படும் சகோதர நகரத்திட்டம் குறித்த விடயமானது அடிப்படையில் மாகாணம் அல்லது மாநிலம் சம்மந்தப்பட்ட விடயம்அல்ல. மாறாக நகரச






பைகளுக்கு இடையிலான விடயம். இதில் முதல்வர்கள் பொது வாகத் தொடர்புபடுவதில்லை.

இதில் கண்டுகொள்ளப்படாத இன்னுமொரு விடயம் முல்லைத்தீவு நகரம் குறித்தது. மாந்தைகிழக்கு, கரைதுறைபற்று, புதுக்குடியிருப்பு மற்றும் துணுக்காய் ஆகிய நான்கு பிரதேசச பைகளாகவே முல்லைத்தீவு மாவட்ட உள்ளூராட்சி நிர்வாகம் பிரிக்கப்பட்டுள்ளது.

முல்லைத்தீவு நகரசபை என்று ஒன்று கிடையவே கிடையாது. கரைதுறைபற்று என்ற பிரதேசசபை எல்லைக்குள்தான் முல்லைத்தீவு நகரம் அடங்குகிறது.தற்போது அந்தப் பிரதேசச பைகள் கலைக்கப்பட்டு உதவி அரச அதிபர் மற்றும் விசேட ஆணையாளர் ஆகியோருக்கு ஊடாகவே வடக்குமாகாணம் எங்கும் உள்ளூராட்சி நிர்வாகம் கையாளப்படுகின்றது. இவ்வாறான களநிலையில் காட்சியளிக்கும் முல்லைத்தீவு நகரமானது எப்படிக் கனடிய நகரம் ஒன்றின் இணை நகரமாகும் என்ற கேள்வி இயல்பானதுதான்.

இதில் முதல்வருக்கான அதிகாரம் என்ன? அவ்வாறே அதிகாரம் இருந்தால் அதுகனடிய மாகாணங்களின் முதல்வர்களுடன் இணை ஒப்பந்தங்களைக் கைச்சாத்திடும் நிலை தோன்றும் பொழுதுதான் அதற்கான வலிமையை, சிறப்பை நாம் கொண்டாட முடியும். இல்லையென்றால் இது ஒரு சம்பிரதாயபூர்வ நகர்வென்றால் அதற்கான உரிய பிரதிநிதிகளை வரவழைத்து அறிவித்துவிட்டுப் போவதுதானே சிறந்தது.

இணை நகரத் திட்டத்தை "மேற்குலக அரசியல் வியாபாரத் தந்திரம்" என ஒற்றைச் சொல்லில் குற்றஞ்சாட்டி இந்தப் பக்கத்தை நிரப்புவதில் இந்தப் பத்தி எழுத்தாளருக்கு எந்த உடன்பாடும் கிடையாது.

ஆனாலும் முதல்வர் விக்கினேஸ்வரனின் வருகை என்ற நிகழ்ச்சி நிரலில் முன்நிற்பவர்கள் கருத்தியல் அடிப்படையில் தமிழ்த்தேசியக் கூட்டமைப்பை நிராகரிப்பவர்கள்! வடக்குமாகாணசபைத் தேர்தலைப் புறந்தள்ளியவர்கள்! பதின்மூன்றாவது அரசியல் சட்டத்தின் கீழான மாகாணச பை மூலமான அதிகாரப்பரவலாக்கலை அடியோடு நிராகரிப்பவர்கள்! தமிழ்த்தேசிய சுயநிர்ணய உரிமைக்கான விட்டுக்கொடுப்பற்ற போராட்டத்தில் தங்களை ஈடுபடுத்து பவர்களாகப் பிரகடனப்படுத்துபவர்கள்! முதல்வர் தேர்தலின் போது அவரைக் கடுமையாக எதிர்த்தவர்கள்! அழைப்பவர்களில் முக்கியமானவர்கள் ஆதரிக்கும் "தமிழ்த்தேசிய மக்கள் முன்னணி" மாகாணசபைத் தேர்தலையே பகிஷ்கரிக்கக் கோரியிருந்தது.

மொத்தத்தில் இந்த ஏற்பாட்டில் ஈடுபட்டுள்ள சில அமைப்புகளுக்கோ அல்லது பிரமுகர்களுக்கோ இதன் மூலம் கிடைக்க இருக்கின்ற அரசியல் முக்கியத்துவம், மக்கள்ஆதரவு, புகழ்வெளிச்சம் குறித்தஅக்கறைகள் இருக்கின்றன என்பது ஒரு பதிவு.

வடக்கு மாகாண முதல்வர் தமிழராக, தமிழர் தலைவர்களில் ஒருவராகக் கனடா வருவதில் எந்தப் பிரச்சினையும் கிடையாது. கனடாவில் வாழும் இலங்கைத் தமிழர்கள் தமது தாய்நிலத்தைச் சார்ந்த முதல்வர்என்ன நோக்கம் கருதிக் கனடா வந்தாலும் அதை வாழ்த்தவும் வரவேற்கவுமே செய்வார்கள். அதில் எந்த மறுபேச்சுக்கும் இடம் கிடையாது.

ஆனால் அவரது வருகையின் நோக்கங்களையும் அதன் விளைவுகளையும் பேசப் புறப்பட்டால் முத்திரை குத்திப் புறந்தள்ளும் குணமும் எம்மவர்களில் சிலருக்கு உண்டு. அரசியல் செய்கிறோம் என்று சொல்லிக் கொண்டு அரசியல் பேச்சைத் தணிக்கைசெய்ய முற்படுகின்ற இந்தத் தமிழ்தேசிய அதிகாரிகளை நாங்கள் இனம் கண்டாலும் அவர்களது மனோபாவம் தணிவதற்கான வாய்ப்புகள் இல்லாமலே இருக்கிறது.

முதல்வரின் அழைப்பின் பின்னணியில் சமுதாய ரீதியாக அடிப்படையில் மிகத் தவறான அணுகு முறைகள் உள்ளன. தீர்மானங்களையும் முன்னெடுப்புகளையும் அடிமட்டத்திலிருந்து கொண்டுசெல்லாமல் மேலிருந்து கீழே திணிப்பதை எவ்வாறு வகைப்படுத்தலாம் ?

இதனைக் கனடா வாழ் தமிழ்ச் சமூகம் எவ்வாறு எதிர்கொள்ளப் போகிறது ?

அருள் எழிலன்

# சசிகலா நடராஜன் தலைமை ஏற்றுக்கொள்வார்களா மக்கள்?

அடிமட்டத் தொண்டர்களைக் கொண்ட கட்சிதான் அண்ணா திராவிட முன்னேற்றக்க ழகம் (அதிமுக). இதன்பலம், பலவீனம் இரண்டுமே அதுதான். ஒற்றை அதிகாரத்தை குவித்து வைத்து அத்தனை பேரையும் தன் விரல்நுனியில் வைத்திருந்த தமிழகத்தின் முன்னாள் முதலமைச்சர் ஜெயலலிதா ஜெயராமின் மறைவுக்குப் பின்னர் அதே அதிகாரம் சசிகலா நடராஜனின் கைகளுக்கு மாறியிருக்கின்றது. ஆனால், அது முன்னரைப் போலவே பலனளிக்குமா என்பதுதான் இப்போதைய கேள்வி?

MGR மறைவுக்குப் பின்னர் அதிமுக ஆளும்கட்சியாக இல்லை. பிரிந்து கிடந்த கட்சியை ஒன்று சேர்த்து இரட்டைஇலையை மீட்டார் ஜெயலலிதா ஜெயராம். அப்போது திமுக ஆட்சி நீக்கம் செய்யப்பட்டு தேர்தலும் வந்தது. தேர்தல் பிரச்சாரத்தில் ராஜீவ்காந்தி கொல்லப்பட்டார். அந்த



> "இன்றைய அதிமுகவை MGR கால அதிமுக போல நினைக்க முடியாது. இன்று தலைவர்கள் இல்லை; விசுவாசிகள் மட்டுமே உள்ளனர்"

அனுதாப அலையை, தான் திரட்டிவைத்திருந்த கட்சியோடு பொருத்தி ஆட்சிக்கு வந்தார் ஜெயலலிதா ஜெயராம். ஆட்சிக்கு வந்த பின்னர் அவரை எதிர்த்தவர்களே அமைதியாகிவிட்டார்கள்.

அதன்பின்னர் கட்சியை தன் எண்ணத்துக்கேற்ப தயார்படுத்திக்கொண்டார். ஜெயலலிதா ஜெயராமுக்கு தேவைப்பட்டதெல்லாம் கேள்வியே கேட்காது தன் எண்ணங்களைச் செயல்படுத்தத் தெரிந்தவர்கள் மட்டுமே.ஜெயலலிதா ஜெயராமின் மறைவின் பின்னர் தமிழக அரசு எந்திரத்தை நகர்த்திச்சென்ற அதிமுக தலைவர்கள்,

அரசுக்கு வெளியே கட்சியை நடத்திச்சென்ற தலைவர்களும்கூட ஜெயலலிதா ஜெயராம் விரும்பியபடி, கேள்வியே கேட்காமல் உருவானவர்கள். அவ்வாறு உருவான அரசையும், கட்சியையும் நடத்திச்செல்லும் போதுதான் கடந்த டிசம்பர் மாதம் மரணமடைந்தார் ஜெயலலிதா ஜெயராம்.

மரணிப்பதற்கு முன்னர் கடந்த 30 ஆண்டுகளாக ஜெயலலிதா ஜெயராம் கட்சியையும் ஆட்சியையும் வழிநடத்தியபோது அவருடன் இணைந்து பயணித்தவர்தான் "சின்னம்மா' என தற்போது அழைக்கப்படும் சசிகலா நடராஜன். "அம்மா' என ஜெயலலிதா ஜெயராமையும், "சின்னம்மா' என சசிகலா நடராஜனையும் அதிமுக இரண்டாம்மட்ட தலைவர்களும், அமைச்சர்களும் அழைப்பது புதிதல்ல. இது 30 ஆண்டுகளாக அதிமுகவின் இன்றைய தலைவர்களுக்கு ஏற்பட்டுள்ள பயிற்சி.

இன்றைய அதிமுகவை MGR கால அதிமுக போல நினைக்க முடியாது. இன்று தலைவர்கள் இல்லை; விசுவாசிகள் மட்டுமே உள்ளனர். அதனால்தான் ஜெயலலிதா ஜெயராம் உயிருக்குப் போராடும் போதே அடுத்தக்கட்ட திட்டங்களை வகுத்துக் கொடுக்கும் வேலையை சசிகலா நடராஜன் தொடங்கிவிட்டார். நள்ளிரவு முதல்வராக ஓ.பன்னீர்செல்வம் பதவியேற்றது முதல், ஜெயலலிதா ஜெயராமின் இறுதி நிகழ்வுவரை சசிகலா நடராஜனின் ஏற்பாட்டில் மட்டுமே நடந்திருக்கின்றது.

அதனுடைய தொடர்ச்சியாகத்தான் அதிமுக தலைவர்கள் அம்மாவுக்குப் பிறகு "சின்னம்மா' என ஐக்கியமாகினார்கள். கட்சியின் தலைமை சிந்தாமல் சிதறாமல் சின்னம்மாவின் கைகளுக்குச் சென்றிருக்கின்றது. சின்னம்மாவுக்கு நம்பிக்கையையும் விசுவாசத்தையும் வெளிப்படுத்தும் விதமாக அம்மாவின் படம் சிறியதாகவும், சின்னம்மாவின் படங்கள் பெரிதாகவும் மாற்றம் காண்கின்றன.

ஆனாலும், அடித்தட்டு தொண்டர்களான அதிமுகவினரால் இதைப் பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அதாவது உடனடியாக பொறுத்துக் கொள்ள முடியவில்லை. அவர்களும் இந்த இடத்துக்கு வந்து சேர சில மாதங்கள் ஆகலாம். ஆரம்பத்தில் சில இடங்களில் போராட்டங்களை நடத்தினார்கள். ஆனால், இந்த போராட்டங்கள் எதுவும் தலைவர்கள் தலைமையில் நடக்கவில்லை.

தொண்டர்கள் தன்னெழுச்சியாக போராடுகின்றார்கள். பெரும்பாலான அதிமுக தொண்டர்களின் மனநிலை இவ்வாறாக இருக்கும் நிலையில், அதிமுகவின் பொறுப்பில் இருக்கும்ஒன்றியச் செயலாளர்கள் முதல் அமைச்சர்கள் வரை முணுமுணுப்பு கூட இல்லாமல் ஏற்றுக்கொண்டிருக்கின்றார்கள் சின்னம்மாவை.

இவை அனைத்திற்கும் காரணம் ஆட்சி அதிகாரம், அரசுக்குள்ளும் புறமும், கட்சிக்குள்ளும் புறமும் என ஆளும்கட்சியாக இருக்கும் அதிமுக சார்ந்து உருவாகும் நலன்களும் ஏற்கனவே ஜெயலலிதா ஜெயராமால் வழங்கப்பட்டுள்ள பயிற்சியுமே, அதிமுக இப்போதைக்கு சிதையாமல் கைமாறக் காரணம்.

ஆனாலும், விடைதெரியாத, தெரிந்தே ஆகவேண்டிய மிகப்பெரிய கேள்வி ஒன்று உள்ளது.திமுகவில் இருந்து பிரிந்து அதிமுகவைத் தொடங்கி பல எதிர்ப்புகளையும் மீறி ஆட்சிக்கட்டிலில் ஏறினார் MGR. ஜெயலலிதா ஜெயராம் அதிமுக பொதுச் செயலாளர் ஆன பின்னர் வென்று காட்டினார். ஆட்சியில் அமர்ந்தார். மக்களும் அவரை ஏற்றுக்கொண்டார்கள்.

ஆனால், இந்த இரு பெரும் தலைவர்களின் சாதனைகளும், மக்கள் அவர்களை ஏற்றுக்கொண்டதற்கும் இடையில் ஒரு பெரும் போராட்ட வரலாறும், தேர்தல் வரலாறும் உள்ளது. இது போன்றதெதுவும் சசிகலா நடராஜனுக்கு இப்போதைக்கு இல்லை.ஜெயலலிதா ஜெயராம் வென்றுவைத்த ஆளும்கட்சிக்கு தலைமையேற்றிருக்கின்றார் சசிகலா நடராஜன்.

தொண்டர்கள் ஏற்றுக்கொள்ளலாம். மக்கள் இன்னும் ஏற்றுக்கொள்ளவில்லை என்பதே உண்மை. அப்படிஏற்றுக்கொண்டால் மட்டுமே சசிகலா நடராஜனினால் அரசியலில் வெல்ல முடியும். இதுதான் யதார்த்தம்.






# கடனிலிருந்து செல்வம் பெருக...

பெரி முத்துராமன்

**நா**ம் வாழும் இந்த ரொறன்ரோ மாநகரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும் வீட்டின் விலைகள் தொடர்ந்தும் ஏறுமுகமாகவே இருக்கின்றன. அரசின் நடவடிக்கைகள் இது வரை விலையேற்றத்தை தடுத்ததாகத் தெரியவில்லை.

சந்தையில் விலைகள் வீழும் என்று வீடு வாங்குவதைத் தள்ளிப் போட்ட பல பேரை 2008 இல் இருந்து எனக்குத் தெரியும். நினைத்தபடி விலைகள் குறையவில்லை என்றவுடன், இன்னும் கூடிய விலைக்கு, குறைந்த அளவு இடத்தை அடுத்து வந்த ஆண்டுகளில் வாங்கினர். வீட்டுச் சந்தையைப் பொறுத்த வரை அமெரிக்காவில் நடப்பது அப்படியே கனடாவிலும் நடக்காது என்பது நிருபணம் ஆகிவிட்டது. இதைவிடக் கொடுமை என்னவென்றால் இருந்த வீட்டை விற்று விட்டு, புதிய வீட்டை வாங்ககாத்திருந்த சிலரின் நிலைமைதான்.

சரி நிகழ்காலத்திற்கு வருவோம் - இனி என்ன நடக்கும்?

எப்போதும் போல் பல விதமான ஆரூடங்கள்: பெரும்பாலானோர் விலைகள் அதிகரிக்கும். ஆனால் முந்தைய ஆண்டுகள் போல வேகமாக அதிகரிக்காது என்கின்றனர். என் கருத்தும் அதுதான். முக்கிய காரணமாக எனக்குத் தோன்றுவது கடினமாக ஆக்கப்பட்ட வீட்டுக் கடன்களே.

ரொறன்ரோ பெரும்பாகத்தில் விலைகள் பல இடங்களில் பத்திலிருந்து பதின்மூன்று ஆண்டுகளுக்குள் இரண்டிப்பாகி இருக்கின்றது. தனி வீட்டின் விலை அதிகரித்த அளவுக்கு அடுக்கு மாடிக் குடியிருப்புக்களின் விலை அதிகரிக்கவில்லை. ஆனால் நிலைமைமாறும். வீட்டுக் கடன்கள் கடினமாக ஆக்கப்பட்டுள்ளதால், அடுக்கு மாடியில் ஒரு இடத்தைத் தேடுவதுதான் பல பேரின் வரவு செலவு கணக்கிற்குள் அடங்கக் கூடியதாக இருக்கின்றது.

முதன் முறையாக வீடு வாங்க நினைப்பவர்களுக்கு நான் கூறும் அறிவுரை இதுதான்: சந்தையின் விலை ஏற்ற இறக்கத்தைப் பற்றிக் கவலைப்படாதீர்கள். வீடு ஒரு அடிப்படைத் தேவை. வாடகை வீட்டில் குடியிருந்து யாரோ ஒருவரைச் செல்வந்தர் ஆக்குவதற்குப் பதிலாக, உங்கள் சக்திக்கேற்ற அளவில் முதல் வீட்டைத் தாமதிக்காமல் வாங்குங்கள்.

சரி, இப்படி வைத்துக்கொள்வோம். தற்போது வீட்டின் விலை குறையும் என்றாலும் நிச்சயம் அடுத்த சில வருடங்களில் மீண்டும் பழைய விலைக்கு வந்துவிடும். மேலும் கடனுக்குக் கட்டும் பணத்தில் ஏறத்தாழ சரி பாதிப்பணம் அசலுக்குப் போகின்றது. நான் திரும்பச் சொல்கின்றேன் - முதல் வீட்டை சக்திக்கு ஏற்ற அளவில் வாங்குங்கள்.

எல்லா அடிப்படைத் தேவைகளும் கணக்கில் எடுத்துக் கொள்ளப்பட்ட பின் மேலதிக முதலீடுகளைச் சிந்திக்கலாம். குறிப்பாக ''ஆபத்துக்கள்'' எப்போது, எப்படி வரும் என்று தெரியாது. அதற்கு பணச்சந்தையில் காப்புறுதி என்ற முறையைக் கையாள்கிறார்கள். வாகனங்களுக்கு மட்டுமின்றி, உங்கள் வீடு, தொழில், உயிர் எல்லாவற்றுக்குமே காப்புறுதி அவசியம். இதுவும் அடிப்படைத் தேவையில் அடங்கும்.

பல பேர் பத்தாண்டுகளுக்கு முன்னர் 300,000 மற்றும் 400,000 டொலர்களுக்கு வாங்கிய வீட்டை இன்றைக்கு மில்லியன் டொலர்களுக்கு மேல் விற்கப்பார்க்கிறோம். 300,000 டொலர் வீட்டை 5 சத வீத சொந்தப்பணத்தில் வாங்கினார்கள் என்று வைத்துக் கொள்வோம். அதாவது டொலர்கள் 15,000. மற்றைய செலவீனங்களுக்காக அவர்கள் செய்த செலவு டொலர்கள் 5,000. ஆக வீடுவாங்க அவர்கள் போட்ட சொந்தப் பணம் 20,000 டொலர்கள். மற்றையது எல்லாம் வங்கிக்கடனே.

இன்றைக்கு மில்லியன் டொலர்களுக்கு விற்கும் போது செலவீனங்கள் 6 சதவீதம் என்போம். அதாவது 60,000 டொலர்கள். இப்போது ஒரு எளிய முறையில் இலாபத்தைக் கணக்கிடுவோம். 20,000 டொலர்கள் சொந்தப் பணம் இன்றைய தினம் 700,000 டொலர்களுக்கு குறையாமல் வளர்ந்திருக்க காண்கின்றோம். இது கட்டுக்கதை அல்ல: உங்களில் சில பேருக்காவது அனுபவ உண்மையாக இருக்கும்.

நான் இத்தனை வருட காலமும் வீட்டுக் கடனைக் கட்டிவந்தேன். மேலும் வீட்டிற்குப் பல செலவுகளைச் செய்தேன் எனலாம். இதையெல்லாம் செய்யாதிருந்தால் மாற்று நிலை என்னவாக இருந்திருக்கும். வாடகை வீடு, அதில் கொடுத்த வாடகை உங்கள் செல்வத்தைப் பெருக்கி இருக்குமா?

சிந்தியுங்கள். முதல் வீட்டை வாங்கியவர்கள் அடுத்த வீட்டை இலாப அடிப்படையில் வாங்கத் திட்டமிடலாம். எப்படி என்கிறீர்களா? வரும் மாதங்களில் விளக்குவோம். கடன்கள் கவலையைத்தான் தர வேண்டும் என்பதில்லை. சரியாகக் கையாண்டால் சந்தோசத்தையே தரும் என்பதைப் புரிந்து செயல்பட வேண்டும்.



# ட்ரம்பின் வெற்றி கனடாவில் தாக்கத்தை ஏற்படுத்துமா?

ராகவி புவிதாஸ்

அமெரிக்காவின் ஜனாதிபதியாக 71 வயதான டொனால்ட் ட்ரம்ப் (Donald Trump) இந்தமாதம் 20ஆம் திகதி பதவியேற்கின்றார். அமெரிக்க ஜனாதிபதிக்கான பதவி என்பது இராஜ்ஜியத்தலைவர், அரசாங்கத்தலைவர், முப்படைகளின் தளபதி என்ற ரீதியில் முக்கியமான அதிகாரங்களைக் கொண்டதாகும்.

வலதுசாரி பெருந்திரள்வாதத்தின் பலம் (right&wing populism) குறித்த ஐயங்கள் ஏதேனும் இருந்திருந்தால், அதையெல்லாம் இல்லாமல் செய்திருக்கின்றது டொனால்ட்ட்ரம்பின் தேர்தல் வெற்றி.

பிரான்ஸ், இத்தாலி, ஸ்கன்டினேவியா மற்றும் கிழக்கு ஐரோப்பாவில் பெருந்திரள்வாத வலதுசாரியம் வெற்றிநடை போடுகின்றது. ஐரோப்பிய ஒன்றியத்தில் உறுப்புரிமையைக் கொண்டிருப்பது குறித்த பிரித்தானியாவின் விவாதங்களின் போது, தாம் புறக்கணிக்கப்பட்டதாக உணர்ந்தவர்களின் சஞ்சலங்களோடு பெருந்திரள்வாத வலதுசாரியம் தன்னை மிக நன்றாகப் பொருத்திக்கொண்டது. இந்த மாதம் 20ஆம் திகதி, ஒரு வலதுசாரிப் பெருந்திரள்வாதி, அமெரிக்காவின் தெரிவு செய்யப்பட்ட ஜனாதிபதியாக பதவியேற்கவுள்ளார். இருந்தபோதிலும் கனடாவில் ட்ரம்பிசம் (Trumpism) ஒருபோதும் நிகழாதுஎன்னும் கருத்து இங்கு ஆதிக்கம் செலுத்துகின்றது. ஆனால், ட்ரம்பிய ஆளுமைகொண்ட ஒருவரினால் கனடாவின் ஆட்சியை வெற்றிகொள்ளமுடியும் என்பதுதான் நிஜம்.

அதற்கெதிரான தடுப்பாற்றல் எம்மிடம் இல்லை. அமெரிக்காவிலும் மேற்கு ஐரோப்பாவிலும் தொழில்களுக்கு பாதுகாப்போ, நிலைப்புத்தன்மையோ இல்லாமல் செய்த சக்திகள் கனடாவிலும் இயங்குகின்றன. குடிவரவு, பாதுகாப்பு மற்றும் குற்றச்செயல்கள் குறித்து அமெரிக்காவில் இருக்கும் அச்சங்கள் இங்கும் உள்ளன.

70 விழுக்காடு கனடியர்கள் ட்ரம்பின் வெற்றியை ஏற்றுக்கொள்ளவில்லை என அமெரிக்காவின் தேர்தலுக்குப் பின்னர் மேற்கொள்ளப்பட்ட கருத்துக் கணிப்பொன்று கூறுகின்றது. ஆனாலும், கண்டிப்பான குடிவரவுக் கட்டுப்பாடுகள், சுதந்திரவர்த்தகத்தின் மீதான நம்பிக்கையீனம், குற்றச்செயல்கள் மீது கடுமையான நடவடிக்கைகள் போன்ற ட்ரம்பிய அடித்தளத்தின் மீது நின்று வாக்குக்கோரும் வேட்பாளர் ஒருவருக்கு 77 விழுக்காடு கனடியர்கள் வாக்களிப்பதைப் பரிசீலிக்கக்கூடும் எனவும் அதே கருத்துக்கணிப்பு கண்டறிந்துள்ளது.

கனடாவில் புதியதலைமையை தேடும்பழைமைவாதக் கட்சியின் தலைமைக்கான வேட்பாளர் Kellie Leitch சினுடைய கோரிக்கையான ''புலம்பெயர்ந்து வருபவர்கள் நாட்டுக்குள் அனுமதிக்கப்படும் முன்னம் கனடிய "மதிப்பீடுகள்" தொடர்பான சோதனை ஒன்றுக்கு உட்படுத்தப்பட வேண்டும்'' என்னும் கோரிக்கையை மறுத்தொதுக்குவது செல்வாக்குமிக்க அரசியல் அறிஞர்களிடையே ஒரு பொதுவழக்காகவே உள்ளது.

அப்படியானால், பெருந்திரள்வாதத்தின் இருண்ட கூறுகளுக்கு இங்கே இடங்கொடாதிருப்பது எதுஏன்ற கேள்வி அவசியமானது. அமெரிக்கர்கள் ட்ரம்ப்பைத் தேர்ந்தெடுத்த வேளையில் கனடியர்கள் அவருக்கு எதிர்மாறான நிலையில் உள்ள ஜஸ்டின்ரூடோவை (Justin Trudeau) ஏன் தமது

> "ட்ரம்பிய ஆளுமைகொண்ட ஒருவரினால் கனடாவின் ஆட்சியை வெற்றி கொள்ளமுடியும் என்பதுதான் நிஜம் கனடாவிலும் அமெரிக்காவிலும் பலவாக்காளர்கள் நாட்டின் தலைமையில் அதிருப்தியான நிலையில் இருந்தார்கள். அதிரடியான மாற்றங்களை உருவாக்கவல்ல வேட்பாளருக்கே வாக்காளர்கள் வாக்களித்தார்கள்"







தலைவராகத் தெரிவு செய்தார்கள் என்ற கேள்வியும் இங்கு பிரதானமாகின்றது.

கடந்த பத்தாண்டுகளின் பெரும்பகுதியில் எண்ணெய் வளமானது கனடாவில் வருமானங்களை உயர்வாக வைத்திருந்தமை இதற்கு ஒரு காரணமாகும்.அமெரிக்காவில் ஏற்றத்தாழ்வு வளர்ந்தது, மாறாககனடாவில் ஏற்றத்தாழ்வு குறைந்தது.

இன்னொருகாரணம், ட்ரம்பைப்போலவே ரூடோவும் ஒரு மாற்றத்துக்கானவேட்பாளராகத்தன்னைவெற்றிகரமாகமுன்னிறுத்தினார். கனடாவிலும் அமெரிக்காவிலும் பலவாக்காளர்கள் நாட்டின் தலைமையில் அதிருப்தியான நிலையில் இருந்தார்கள். அதிரடியான மாற்றங்களை உருவாக்கவல்ல வேட்பாளருக்கே வாக்காளர்கள் வாக்களித்தார்கள்.

அனாலும்கனடாவிலும்நிலைமாறுகின்றது. தற்போதுஎண்ணெய்ப் பொருளாதாரம் மந்தநிலையில் இருக்கின்றது. இங்கு ஏதோ நடந்துகொண்டிருக்கின்றது என்பதை புரிந்துகொண்டவர்கள் போலத்தான் லிபரல்கள் தென்படுகிறார்கள். இருந்தபோதிலும் அவர்கள் முன்வைக்கும் தீர்வானது வழமையான லிபரல் வார்ப்புருவின் அடிப்படையிலேயே அமைந்தது: அதாவது, முதலில் சந்தை நிலமைகள் தன்னுடைய கண்கட்டி வித்தையைக் காட்ட அனுமதித்தல்; பின்னர் ஏதாவது ஏற்றத்தாழ்வுகள் எஞ்சியிருந்தால் அரசாங்கம் அவற்றைச் சரிப்படுத்துதல்.

பெருந்திரள்வாதத்தின் ரசிகராககனடாவின் முன்னாள் பிரதமர் Stephen Harper இல்லாத போதிலும், அதன் இருண்ட பக்கங்கள் குறித்த தகுந்த விளக்கத்தைக் கொண்டிருந்தார். சனத்தொகைக் கணக்கெடுப்பின் “நீண்ட படிவத்தை” இல்லாமலாக்குவது போன்ற குறியீட்டு ரீதியான வெற்றிகளைக் கொடுத்துத் தனது ஆதரவாளர்களின் அடிப்படை உணர்ச்சிகளுக்குத் தீனி போட்டபடி, வணிகம் போன்ற முக்கியமான விடயங்களில் உறுதியான பழைமைவாதியாக இருப்பதே அவருடைய வியூகமாக இருந்தது.

புதிய பெருந்திரள்வாதம் குறித்து இடதுசாரிகள் துல்லியமாக என்ன நிலைப்பாட்டில் இருக்கிறார்கள் என்பது அனுமானிக்கச் சிரமமானது. ட்ரம்ப்பின் ஜனாதிபதித் தேர்தல் பிரசாரம் இனவாதமும் பால்வாதமும் கொண்டது என அவரது வெற்றிக்கு கனடாவின் புதிய ஜனநாயகக்கட்சியின் தலைவர் Thomas Mulcair எதிர்வினையாற்றியிருந்தமை இங்கு குறிப்பிடப்படவேண்டியது.

இவை அனைத்தும் தர்க்கத்தின் பிரகாரம் உண்மையாகஇருக்கிற போதிலும் அவை எந்தவகையிலும் உதவிகரமானவையாக இல்லை. ட்ரம்ப் ஆட்சேபனைக்குரியவராக இருக்கலாம் என்பதை நாம் அறிவோம். ஆனாலும் ஒரு ஜனநாயகத் தேர்தலை சிறப்பாக வெல்வதற்கு இடமளித்த சக்திகள் எவை என்பதைத்தான் நாம் புரிந்துகொள்ளவேண்டியுள்ளது.



# பல்கலை வித்தகர் கார்த்திக் இராமலிங்கம்

யாதவி கதிர்காமு

தமிழ்நாட்டின் சென்னையை பூர்வீகமாக கொண்டு கனடாவில் வசித்துவரும் கார்த்திக் இராமலிங்கம் கடந்த 22 வருடங்களாக உலகத்தரம் வாய்ந்த இசைக்கலைஞராக தன்னை அடையாளப்படுத்தியுள்ளார். ஒலிப்பதிவு இசைக்கலைஞர், இசையமைப்பாளர், மேடை நிகழ்ச்சி பங்கேற்பாளர், இசைஆசிரியர் என இசை குறித்த இவரது முகவரி மிகப்பெரியது.

உலகளாவிய ரீதியில் பல்தரப்பட்ட இசைக்கலைஞர்கள் பங்கேற்கும் நிகழ்வைத் தலைமை தாங்கி நடத்த, ஒன்ராரியோவில் உள்ள முன்னணி பாரம்பரிய இசை நிறுவனத்தினால் அண்மையில் கார்த்திக் இராமலிங்கம் நியமிக்கப்பட்டுள்ளார் என்பது இவரது இசைத்திறனுக்கான எடுத்துக்காட்டாகும்.



20 ஆண்டுகளுக்கும் மேலாக, ஓர் இசைக் கற்கையாளராகவுள்ள கார்த்திக் இராமலிங்கம், கனடாவில் உள்ள கிழக்கும் மேற்கும் இணைந்த முதலாவது உயர்நிலை பாடசாலையின் இசைக் கருவி கற்கைக்கான பாடத்திட்டத்தை வடிவமைக்க 2011 ஆம் ஆண்டு நியமிக்கப்பட்டவர்.

பல இசைக் கருவிகளை இலாவகமாகவும் தொழில்முறையாகவும் இசைக்கும் திறன் பெற்ற இவர், இந்துஸ்தானி, கர்நாடகம் மற்றும் மேற்கத்தேய இசைஆகியவற்றை முறையே பயின்று பாண்டித்தியம் பெற்றவர்.

ஓர் ஒலிப்பதிவு இசைக் கலைஞராக, கார்த்திக் இராமலிங்கம் திரை இசை, நிலையக் குறியிசைகளை உருவாக்கியுள்ளதுடன், ஏ.ஆர்.ரஹ்மான் உள்ளிட்ட இந்தியாவின் முன்னணி இசையமைப்பாளர்களான தேவா, சபேஷ்-முரளி, ஸ்ரீகாந்த்தேவா, தினகரன், எ.ஆனந்ததாயன்பன், பால் அகஸ்ட்டின், கணேஷ்குமார், உதயா, ஆனந்த்-கோபால், ஜோஷுவாஸ்ரீதர், சுரேஷ்பீட்டர்ஸ், ஜோலி ஆப்ரஹாம் ஆகியோரின் தனிப்பட்டஆல்பப் பதிவுகளிலும் பணியாற்றியுள்ளார்.

இவைதவிர MS விஸ்வநாதன், தேவா, KJ யேசுதாஸ், SP பாலசுப்ரமணியம், எஸ்.ஜானகி, KS சித்ரா, TM சௌந்தரராஜன், P சுசீலா, SN சுரேந்தர், AV ரமணன், உமாரமணன், சுஜாத்தா, ஸ்வேதாமேனன், மதுபாலகிருஷ்ணன், கிட்டார்பிரசன்னா, ஸ்ரீநிவாஸ், அனுராதாஸ்ரீராம், மனோ, பெனோய்சக்கோ, உன்னிகிருஷ்ணன் மற்றும் சுரேஷ்பீட்டர்ஸ் உள்ளிட்ட இந்தியாவின் முன்னணி இசையமைப்பாளர்கள், பாடகர்கள் மற்றும் கலைஞர்களின் இசைக்கச்சேரி நிகழ்வுகளிலும் பங்காற்றியுள்ளார்.

கார்த்திக் இராமலிங்கத்தின் கனடிய அடையாளங்களில் பிரதானமானது 2001 ஆம் ஆண்டுஇவர் ஆரம்பித்த கலப்பிசைக் குழுமமான விஷ்வ-மித்ரா (VISHWE-MITHRAA).சமாதானம், அன்பு மற்றும் சகோதரத்துவம் என தனது இசை மூலம் விஷ்வ-மித்ரா பல்வேறு மேடைகளை அலங்கரித்துள்ளது.கனடிய ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம் மற்றும் Harbour Front Concerts உட்பட பல்வேறு இடை மேடையில் தடம்பதித்துள்ளது விஷ்வ-மித்ரா.



# Viola Desmond
## 1914–1965







அருணோதயன் தியாகராஜா

# கனடிய பணத்தாளில் புதியமுகம்

கனடாவின் பணத்தாள்களை அலங்கரிக்கும் முதலாவது கனடியப் பெண்மணி என்ற பெருமையை பெறவுள்ளார் வயோலா டெஸ்மாண்ட் (Viola Desmond). 2018 ஆம் ஆண்டு நடைமுறைக்கு வரும் கனடாவின் புதிய பத்து டொலர் பணத்தாள்களில் வயோலா டெஸ்மாண்டின் புகைப்படத்தை அச்சிடுவதற்கான உத்தியோகபூர்வ அறிவித்தல் வெளியாகியுள்ளது.

1914 ஆம் ஆண்டு யூலை மாதம் 6ஆம் திகதி பிறந்த வயோலா டெஸ்மாண்ட் ஒரு முழுமையான செயல்வீரராகவே அறியப்பட்டவர். தொழிலதிபரான இவர், தனது அழகு பள்ளி மூலம் NovaScotia வில் வாழ்ந்த இளம் கறுப்பினப் பெண்களுக்கு ஒரு வழிகாட்டியாக இருந்தவர்.

1946 ஆம் ஆண்டு திரையரங்கொன்றில் வெள்ளையினத்தவர்கள் மட்டும் அமரவேண்டிய பிரிவில் அமர்ந்து அங்கிருந்து வெளியேற மறுத்த வர்வயோலா டெஸ்மாண்ட். இதற்காக சிறிய வரிமீறல் குற்றச்சாட்டில் கைது செய்யப்பட்டு சிறை சென்றவர். இனப்பாகுபாட்டை ஏற்க மறுத்து அதற்காகவே சிறை சென்ற அவரதுதைரியமான செயலுக்காகப் பெரிதும் அறியப்பட்டவர். இவரது இந்தக் கைது கனடாவில் இனப்பாகுபாடு குறித்து பெருமளவில் அறியப்பட்ட நிகழ்வுகளில் ஒன்றாக அமைந்ததுடன் நவீன சிவில் உரிமைகள் இயக்கத்தின் ஆரம்பமாகவும் இருந்தது.

இந்தக் கைதுக்காகவும் அவரது சிறைவாசத்திற்காகவும் வயோலா டெஸ்மாண்டின் மரணத்தின் பின்னர் கனடிய அரசாங்கமும் Nova Scotia மாகாண அரசாங்கமும் பகிரங்க மன்னிப்புக் கோரியிருந்தது. அதற்கும் ஒருபடி மேலாக 2015 ஆம் ஆண்டு இவரது பெயரில் Nova Scotia மாகாணத்தின் முதலாவது பாரம்பரிய தினம் நடைபெற்றது.

முன்னர் கனடாவின் ஆளுநர் நாயகமாக சீன இனத்தவரான Adrienne Clarkson பதவி வகித்த காலத்தில்கனடாவில் வாழ்ந்த சீன இன இளம் பெண்கள் தங்களுக்கும் எதிர்காலத்தில் ஏற்படக்கூடிய விரிவடைந்த சாத்தியக் கூறுகள் குறித்து நம்பிக்கை கொள்ள ஆரம்பித்தனர். தற்போது ஒரு கறுப்பினப் பெண்மணியின் புகைப்படம் கனடாவின் பணத்தாள்களை அலங்கரிக்கவுள்ளன. இது புலம்பெயர் கனடியர்களுக்கு குறிப்பிடத்தக்க முன்னேற்ற நடவடிக்கையாகவே நோக்கப்படுகின்றது.

இனவேற்றுமைக்கு எதிராக குரல் எழுப்பியதன் மூலம் சிறைவாசம் அனுபவித்த வயோலா டெஸ்மாண்டை தற்போது கனடா பெருமைப்படுத்துகின்றது.



"ஒரு பாடல் மூலம் எடுத்த எடுப்பில் அனைவரின் கவனத்தை ஈர்ப்பதும் ஜனரஞ்சக அந்தஸ்து பெறுவதும் இலகுவானதல்ல





# 2016 இல் தமிழ் திரையிசையில் நம்பிக்கை தந்த மூவர்

கானா பிரபா




கடந்த சில ஆண்டுகளாகத் தமிழ் திரையிசையில் ஜாம்பவான்கள் என்றில்லாமல் பல்வேறு புது இசையமைப்பாளர்கள் தம் வல்லமையைக் காட்டி ரசிகர்களைக் கட்டியிழுக்கும் ஆரோக்கியமான சூழல் நிலவுகின்றது. இதனால் புதுப்புது உத்திகளையும், பாய்ச்சலையும் இசையமைப்பாளர்களால் காட்டமுடிகின்றது. இந்த வகையில் 2016 ஆம் ஆண்டில் பலரது கவனத்தையும் ஈர்த்த மூவர் குறித்தது இந்தப் பதிவு.

கடந்த ஆண்டில் தமிழ் திரை இசையமைப்பாளர்களில் ரசிகர்களின் நம்பிக்கைக்கு உரியவராக தன்னை பிரதானப்படுத்தியவர் இசையமைப்பாளர் ஜஸ்டின் பிரபாகரன். “கண்ணக் கட்டிக் காட்டில் விட்டுப் போறாளே கண்ணழகி கண்ணழகி தானே” என்ற “காலக்கூத்து” திரைப்படத்தின் பாடல் இதற்கு தகுந்த உதாரணம். 2016இல் “ஒருநாள் கூத்து” திரைப்படத்தில் “எப்போ வருவாரோ” என்ற கோபாலகிருஷ்ண பாரதியாரின் பாடலின் மீள் இசை, ஆறு மில்லியன் பார்வையை YouTube இல் கடந்திருக்கும் “அடியே அழகே” பாடலில் தோய்த் தெடுக்கப்பட்ட காதல் பிரிவின் துயர் காட்டும் அழகியல், துள்ளிசை ரசிகர்களை கைவிடாத “பாட்டைப் போடுங்க ஜி” என தீனியைக் கொடுத்திருக்கிறார் ஜஸ்டின் பிரபாகரன்.

அத்தோடு நில்லாமல், “ராஜாமந்திரி” திரைப்படத்தில் “லெகுவா லெகுவாசு பாடல் பலருக்கும் பிடித்துப்போன பாடலாக அமைந்தது. “எதிர்த்த வீட்டு காலி ஃபிளவரே” பாடல் வரிகளில் கூட அந்தக்காட்சி நுட்பத்தை உணர்ந்த வகையில் கொடுத்து வசீகரித்தது. இவை தவிரவும் “ஸ்நேகிதியே ஸ்நேகிதியே நீ சிரித்தால் போதுமடி” என்று தன் அட்டகாசத்தையும் காட்டிவிட்ட வகையில் “ராஜாமந்திரி” படப் பாடல்களும் முத்திரைப் பாடல்களாக அமைந்தன.

ஒரு பாடல் மூலம் எடுத்த எடுப்பில் அனைவரின் கவனத்தை ஈர்ப்பதும் ஜனரஞ்சக அந்தஸ்து பெறுவதும் இலகுவானதல்ல. இப்படியான கௌரவமெல்லாம் ஒரு புதுமுக இசையமைப்பாளருக்குக் கிடைப்பது வரம். “கொஞ்சிப்பேசிட வேணாம் உன் கண்ணே பேசுதடா” என்ற சேதுபதி திரைப்படத்தின் பாடல் மூலம் நிவாஸ் கே பிரசன்னாவுக்கு அந்த வரம் கிட்டியிருக்கிறது.

“உன்னால காக்கிச்சட்டை கலரு ஆச்சு” பாடலும் கூட சேதுபதி படத்தின் வெற்றியில் பங்குபோட்ட பாடல்களில் ஒன்றாக அமைந்தது. அனுருத் குரலில் “ஹேமாமா” ஒரு அட்டகாசத் துள்ளிசை. “விண்மீன் விதையில்” (தெகிடி) பாடலின் நீட்சியோ எனப்பட்டது நிவாஸ் கே பிரசன்னா 2016 ஆம் ஆண்டு கொடுத்த இன்னொரு படமான “ஜீரோ” படப் பாடல்கள்.

சேதுபதி படப் பாடல்கள் அளவுக்குப் பிரபலமாக இல்லாவிட்டாலும் “உயிரே உன் உயிரென நானிருப்பேன்” பாடலைக் கேட்டால் சேதுபதிக்கு சற்றும் சளைத்ததல்ல என்று சொல்ல வைக்கும். இந்தப் படத்தின் பாடல்களில் ''You are in my heart'' ஒரு ஆங்கிலப் பாடலும் உள்ளது. பாடலின் முடிவில் வரும் வயலின் ஆலாபனை அப்படியே நெஞ்சைக் கிள்ளிவிடும். “ஜீரோ'' படத்தின் ஒட்டு மொத்தப் பாடல்களைக் கேட்டபோது இந்த இசைத்தொகுப்பு முழுவதுமே மென்மெலடியாக இருக்கவேண்டும் என்று முடிவுகட்டி இசையமைத்தது போல் இருக்கும்.

புதிதாக மனதில் இடம்பிடிக்கும் பாடல் ஒன்றின் பின்னணியை தேடினால் அழகான அதிசயம் காத்திருக்கும். அவ்வாறானதொரு அதிசயம்தான் இசையமைப்பாளர் அஜீஸ். விஜய் டிவி சூப்பர்சிங்கர் வெற்றியாளரான இவர் வேறு இசையமைப்பாளர்களின் சில பாடல்களுக்கு குரல் கொடுத்திருந்தாலும், “பாம்புச்சட்டை'' திரைப்படத்தின் மூலம் இசையமைப்பாளராக கவனத்தை ஈர்க்கின்றார். “நீ உறவாக ஆசை” என இவர் இசையமைத்த பாடலும் “நீயும்நானும்” பாடலும் அழகிய சுகங்கள்.

எந்த ஒரு சிறந்த இளம் படைப்பாளிக்குத் தேவை ஒரு பரவலான மக்கள் வட்டத்துக்குச் சென்று சேரக்கூடிய ஒரு நட்சத்திர வெற்றி. அவ்வாறான வெற்றி சாத்தியப்படும் போது 2017 ஆம் ஆண்டில் இவர்களின் பங்கு திரையிசையின் போக்கை எவ்வாறு மாற்றப்போகின்றது என்ற எதிர்பார்ப்போடு காத்திருப்போம்.



# Sri Lanka

## THE STRUGGLE FOR PEACE IN THE AFTERMATH OF WAR



# இலங்கை: போருக்குப் பின்னரான அமைதிக்கான போராட்டம்

துளசி இராமகிருஸ்ணன்

கனடாவில் வாழ்ந்து வரும் இலங்கை தமிழரான அமர்நாத் அமரசிங்கம் (Amarnath Amarasingam) டேனியல் பாஸ் (Daniel Bass), உடன் இணைந்து எழுதி வெளியீட்டுக்காக காத்திருக்கும் அங்கில மொழியில் அமைந்த புத்தகம் Sri Lanka: The Struggle for Peace in the Aftermath of War (இலங்கை: போருக்குப் பின்னரான அமைதிக்கான போராட்டம்)

இலங்கைத் தீவில் நீடித்த உள்நாட்டின் யுத்தம் 2009 ஆம் ஆண்டு மே மாதத்தில் இரத்தக் குழத்தின் மத்தியில் தீர்வொன்றுக் குக் கொண்டு வரப்பட்ட போதும், நிலையான சமாதானத்திற்கான வாய்ப்பு என்பது நிச்சயமற்றதாகவே தொடர்ந்தும் உள்ளது. ஸ்ரீலங்கா இராணுவத்தினரின் பிரச ாரங்கள் முற்றுப்பெற்று, விடுதலைப்புலிகள் முன்னெடுத்த அரசியல் கொலைகளும் தற்கொலைப் படைத்தாக்குதல்களும் தற்போது இடம்பெறுவதில்லை என்ற போதும் போர் முடிவுற்ற தினத்திலிருந்தே கட்டமைப்பு ரீதியான வன்முறைகள் தொடந்து இடம்பெற்று, ஏற்கத்தக்களவில் தீவிரமாகியுமுள்ளது. இலங்கையின் முன்னாள் ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஸவின் அரசாங்கம் விடுதலைப் புலிகளுக்கு எதிரான வெற்றியை நிகழ்த்தி, எல்லா விதமான எதிர்ப்புக்களையும் மௌனிக்க செய்துவிட்ட நிலையில், போரின் பின்னரான காலப்பகுதியில் தமிழர்களுக்கு எதிரான பாகுபாடுகளும் முஸ்லிம்களுக்கு எதிரான வன்முறைகளும் பெரும்பான்மை பேரினவாதமும் அதிகரித்து விட்டது.

2015 ஆம் ஆண்டின் ஆரம்பத்தில் தேர்தலில் மைத்திரி பாலசிறிசேன ஜனாதிபதியாகத் தெரிவானதனால் போருக்குப் பின்னரான காலப்பகுதியில் அதிகாரத் துஷ்பிரயோகங்கள் குறைவடையத் தொடங்கியது. ஆனால், நீண்ட காலப்பிரச்சினைகள் பலவற்றைத் தீர்க்க நீண்டகாலம் எடுக்கும். போருக்குப் பின்னரான அபிவிருத்தி, அரசியலமைப்பு சீர்திருத்தங்கள், இனமத அடையாளங்கள், நாடு கடந்த செயற்பாட்டு வாதங்கள் மற்றும் நிலைமாறு காலநீதி போன்ற விடயங்களில் மானுடவியல், சமூகவியல், வரலாறு, சட்டம், மத ஆய்வுகள் போன்ற துறைகளைச் சார்ந்த அறிஞர்களை தீவிரமாக ஈடுபடுத்துவதற்காக அவர்களை இந்தப் புத்தகம் ஒருங்கிணைக்கின்றது. போருக்குப் பின்னரான இலங்கையை பலதுறை அணுகுமுறை ஒன்றின் ஊடாக, யுத்தத்தால் சீரழிந்த தீவினைப் பீடித்திருக்கும் கடினமானதும் சிக்கலானதுமான பிரச்சி னைகளை இந்தப் புத்தகம் ஆய்கின்றது.

இந்தப் புத்தகத்தின் இணை எழுத்தாளர்களில் ஒருவரான அமர்நாத் அமரசிங்கம் Waterloo பல்கலைக்கழகத்தின் முது முனைவர்பட்ட ஆய்வாளரும், வலி, பெருமை மற்றும் அரசியல் : கனடாவில் சமூக அசைவியக்கச் செயற்பாட்டு வாதமும் புலம்பெயர்ந்த இலங்கைத்தமிழரும் (Pain, Pride, and Politics: Social Movement Activism and the Sri Lankan Tamil Diaspora in Canada) என்னும் நூலின் ஆசிரியருமாவார். புத்தகத்தின் இரண்டாவது ஆசிரியரான டேனியல் பாஸ் (Daniel Bass), Cornell பல்கலைக்கழகத்தின் தென்னாசியாவுக்கான நிகழ்ச்சி முகாமையாளரும், இலங்கையின் அன்றாட இனத்துவம் : மலையகத்தமிழ் அடையாள அரசியல் (Everyday Ethnicity in Sri Lanka: Up&country Tamil Identity Politics) என்னும் நூலின் ஆசிரியருமாவார்.

ஆசிரியர்கள் : அமர்நாத் அமரசிங்கம் (AmarnathAmarasingam) மற்றும் டேனியல் பாஸ்(Daniel Bass)
வெளியீட்டாளர்கள்: Oxford University Press
வெளியீடு: January, 2017 (முதல் பதிப்பு)
காகித அட்டை: 288 பக்கங்கள்
மொழி: ஆங்கிலம்



# புதிய தலைமை தேடும் கனடாவின் இரண்டு எதிர்க்கட்சிகள்

பாஸ்கரன் ராஜதுரை

கனடாவின் பிரதான எதிர்க் கட்சிகள் இரண்டும் தமக்கான புதிய தலைவர்களைத் தேடுகின்றன. இந்த ஆண்டில் பழைமைவாதக் கட்சியினரும் (Conservatives) புதிய ஜனநாயகக் கட்சியினரும் (NDP) தம்மை வெற்றிப் பாதையில் கொண்டு செல்லக் கூடிய தலைவர்களை தேர்ந்தெடுக்கவுள்ளனர். இந்தத் தெரிவு ஆர்வமூட்டும் ஒன்றாக மாறவுள்ளது.

2016 ஆம் ஆண்டின் இறுதி வரையிலும் பழைமைவாதக் கட்சியினதும் புதிய ஜனநாயகக் கட்சியினதும் தலைமைத்துவப் போட்டிகள் காலங்காலமாக நாம் அறிந்த கதைக்களமும் அறிந்திராத பெயர்களும் சலிப்பூட்டும் நீளம் கொண்ட மோசமான தமிழ் திரைப்படங்களும் போலத்தான் இருந்தன.

ஆனாலும் இந்த வருடம் இந்தப் போட்டிகள் சூடு பிடிக்கப் போகின்றன என்பது பெரும்பாலும் உறுதியாகிவிட்டது. ஏனெனில் இந்த இரண்டு கட்சிகளும் தாம் ஒரே மாதிரியானதும் ஓரளவு கடுமையானது மான சூழ்நிலைக்குள் இருப்பதை உணர்ந்துள்ளன. நாடாளுமன்றத்தில் பலவீனப் பட்டுள்ளநிலை, நீடித்த தற்காலிகத் தலைமையின் கீழ் இழுபடும் நிலை, தன் தவறான அடிவைப்புக்களைத் தாண்டியும் குறிப்பிடத்தக்களவு பிரபலமாக இருக்கும் லிபரல் அரசாங்கத்தோடு மல்லுக்கட்டிக் கொண்டிருக்கும் நிலை என இரு எதிர்க்கட்சிகளும் தமது அடையாளத்தையும் எதிர்காலத் திசை வழியையும் வரையறுத்துக் கொள்வதில் நெருக்கடியொன்றுக்கு முகங்கொடுக்கின்றன.

இந்தக் கட்டத்தில், பழைமைவாதக் கட்சிக்குச் சாத்தியமான மூன்று திசை வழிகள் உள்ளன. முன்னாள் பிரதமரைப் பெரிதும் ஒத்த நிகழ்ச்சி நிரலைக் கொண்ட Andrew Scheer உடன் 'ஹாப்பர் போன்றசு

> "மக்களை வசீகரிக்கும் பந்தயத்தில் ட்ரூடோவுடன் நேருக்கு நேர் போட்டியிடக் கூடிய தலைமைத்துவ வேட்பாளரைத் தேடுவது தவறாகவே அமையக்கூடும்

வழிமுறைக்குப் போகலாம். Kellie Leitch முன்வைக்கும், 'கனேடிய மதிப்பீடுசு




களுக்காகக் குடிவரவாளர்களை வடிகட்டுவது போன்ற மக்களைப் பிளவுபடுத்தும் தீவிர வலதுசாரிய முன் மொழிவுகளால் பிரதி நிதித்துவப்படுத்தப்படுவது போன்ற முழுமையான ஆட்குறைப்பு நடவடிக்கை ஒன்றினைத் தேர்ந்தெடுக்கலாம். அல்லது ஷூடிஞிடச்னுடூ இடணிணஞ் இனால் கருத்துருவாக்கப் படுவதைப் போன்று முற்போக்கான பழைமைவாதத்தை நோக்கித் திரும்புவதைத் தெரிவு செய்யலாம்.

2015 ஆம் ஆண்டு நடைபெற்ற பொதுத் தேர்தலானது கொள்கை ரீதியான வேறுபாடுகளைக் காட்டிலும் தொனியையும் கோபத்தையும் சார்ந்ததாகவே பெரிதும் இருந்தது. ஆனால் 2019 ஆம் ஆண்டில் வரும்




தேர்தல், லிபரல் அரசாங்கம் அளவுக்கதிகமாகச் செவழித்துக் கொண்டிருக்கும் நிலையில், வாக்காளர்களைத் தேடிக் கொள்ளவரவு செலவுத்திட்ட நேர்மை மீது மீளவும் கவனத்தைக் குவிப்பார்கள் என நம்பலாம். அந்தத் தாளத்தைத்தான் Maxime Bernier இது வரைக்குமான தனது தலைமைத்துவத்துக்கான பரப்புரையில் போட்டுக் கொண்டிருக்கின்றார்.

மக்களை வசீகரிக்கும் பந்தயத்தில் ட்ரூடோவுடன் நேருக்கு நேர் போட்டியிடக் கூடிய தலைமைத்துவ வேட்பாளரைத் தேடுவது தவறாகவே அமையக்கூடும். தற்போதுள்ள வேட்பாளர்களில் எவருமே அவ்வாறில்லை. ஆனால் விரும்பத்தக்கவராயிருத்தலும் ஆளுமையும் முக்கியமானவை. Bernier, Raitt, Chong ஆகியோர் அந்த வகையில் தகுதியானவர்கள்.

புதிய ஜனநாயக் கட்சியின் களமுனையில், இன்னமும் முறையாக வேட்பாளர் அறிவிக்கப்படாத நிலையில், தற்போதைய கட்சியின் அடித் தளவாழ்வு நிலையில் நற்பண்பினைக் காணமுடிகின்றது. தனக்கு அடுத்த தலைவர் தேர்ந்தெடுக்கப்படும் வரை சற்று விரும்பா நிலையிலும் தலைவராக இருக்கும் Tom Mulcair உடன், கட்சியினுடைய வாக்குகளின் எண்ணிக்கையினைக் கீழே இழுக்கும் செயற்கையான விசையொன்று இருப்பதாகவும், புதிய தலைமை ஒரு உந்தி விசையைத் தரக்கூடிய புதிய பாய்ச்சலை அனுபவிக்க முடியும் எனவும் நம்ப முடிகின்றது.

Mulcair தன்னை ஆதரவாளர்களிடமிருந்து தனிமைப்படுத்திக் கொண்டுள்ளதுடன் தனது பிரதிநிதிகளுடன் தொடர்புகளை உருவாக்குவதிலும் தோல்வி கண்டுள்ளார். கட்சியின் சாதாரண உறுப்பினர்களுக்குச் செவிசாய்க்கக் கூடிய, வாக்காளர்களிடத்தில் அமைதியையும் கவரக்கூடிய தன்மையையும் காண்பிக்கக் கூடிய ஒரு தலைவரே தற்போது கட்சிக்குத் தேவைப்படுகின்றார்.

தனித்துவமானதும் முற்போக்கானதுமான ஒரு நிலைப்பாட்டினை எடுப்பதுதான் இன்று NDP எதிர்கொள்ளும் பெரும் சவால்களில் ஒன்றாகும். அந்தக் களமுனையில் லிபரல்கள் ஏற்கனவே வெற்றிகரமாக இருக்கிறார்கள். நவதாராளவாதக் கட்சி ஒன்று சமூக ஜனநாயகத் தன்மை கொண்டதாக பார்க்கப்படும் நிலையில் எவ்வாறு ஒரு சமூக ஜனநாயகக் கட்சியாக, பொருத்தப்பாட்டுடன் இருக்க முடியும் என்பது தான் அடுத்த மூன்றாண்டு காலத்துக்கு ஒட்டு மொத்தக் கட்சியும் விவாதிக்க வேண்டிய விடயமாக இருக்கப் போகின்றது.

இருப்பினும், 2015 இல் ட்ரூடோவின் லிபரல்களால் முதன்முறையாக அயர்ச்சியடைந்து போயிருக்கும் இளம் வாக்காளர்கள் பலர் ஒரு பிடிமானத்தை எதிர்பார்த்திருக்கிறார்கள். குறிப்பாக, காலநிலை மாற்றம் ஒரு முக்கியமான பிரச்சினையாக இருந்தால், ஒட்டாவாவினது அணுகுமுறைகளாலும் இவர்கள் ஏமாற்றமடைந்துள்ளார்கள்.

NDPயினதும் பழைமை வாதிகளினதும் -தமது அத்தியாவசியமான பாத்திரத்தினை வரையறுத்துக் கொள்ளவும் அதனை வாக்காளர்களிடத்தில் ஓர் அழுத்தத்தைத் தரும்படிப் பேச வைக்கவுமான - இந்தப் புத்தாண்டுக்கான தீர்மானங்கள் மிகப் பெரும் பணியாகத்தான் இருக்கப் போகின்றன. இந்த வருடம் கனடாவின் பிரதான இரண்டு எதிர்கட்சிகளும் தலைமைக்கான தெரிவைத் தாண்டியும் மேற்கொள்ளும் மாற்றங்கள் கனடிய அரசியல் நோக்கர்களுக்கு மிகுந்த ஆர்வ மூட்டக் கூடியவையாக மாறவுள்ளன.





# இதையும் கொஞ்சம் வாசியுங்கள் ...

இலங்கதாஸ் பத்மநாதன்

நீங்கள் இந்தக் கடைசிப் பக்கத்தை வாசித்துக் கொண்டிருக்கும் போது வடமாகாண சபைமுதல்வரான நீதியரசர் கனகசபாபதி விசுவலிங்கம் விக்னேஸ்வரன் தனது முதலாவது கனடியப் பயணத்தை முடித்திருப்பார். முதல்வரின் இந்த உத்தியோக பூர்வபயணம் ஒருவகையில் முக்கியத்துவம் வாய்ந்ததுதான். இலங்கையில் நாடாளுமன்ற மற்றும்மாகாண சபைத் தேர்தல்களில் தமிழர் ஒருவர் பெற்ற அதிகளவு விருப்புவாக்குகளுடன் (மொத்தம் 132,255 வாக்குக்கள்) சி.வி. விக்னேஸ்வரன் வடமாகாணசபைத் தேர்தலில் வெற்றி பெற்ற கணம் முதல் இவர் மீது ஒரு நம்பிக்கை ஒளி பாய்ச்சப்பட்டது.



இவர் 2015 இல் தன்னை அரசியலுக்கு அழைத்து வந்த தமிழ்த்தேசியக்கூட்டமைப்பின் தலைமையை எதிர்த்து நாடாளுமன்றத்தேர்தலில் "உண்மையான தமிழ் தேசியவாதிகளுக்கு மக்கள் வாக்களிக்க வேண்டும்" என வேண்டு கோள் விடுத்தமை பெரும் சர்ச்சையானது. இந்தக் கூற்று தமிழ் தேசிய மக்கள் முன்னணிக்கான ஆதரவாக நோக்கப்பட்டது. தேர்தலில் தமிழ் தேசிய மக்கள் முன்னணி ஆசனங்கள் எதனையும் கைப்பற்றாத போதிலும் சி.வி.விக்னேஸ்வரனின் இந்த ஆதரவுக் குரல் தமிழ்த் தேசியக்கூட்டமைப்பின் மீதும் அதன் தலைமையின் மீதும் அதிருப்தியில் இருந்த ஒரு சாராரை முதல்வர் பக்கம் ஈர்த்தது.

இதன் எதிரொலியாக புலம்பெயர் தமிழ் சூழலில் நம்பிக்கையின் நட்சத்திரமாக மாறினார் முதல்வர் சி.வி.விக்னேஸ்வரன். தனது வாழ்நாளின் பெரும் பகுதியை நீதித்துறையில் செலவு செய்த அரசியலில் புதியவரான ஒருவரினால் தமிழ் மக்களின் இன்றைய தேவைகேற்ப ஒரு தலைமையை வழங்கிவிட முடியுமா என்ற கேள்வி முன் வைக்கப்படாமலே தமிழ் தலைமைகளுக்கான ஒரு "மாற்றீடாக" முதல்வர் புலம் பெயர்தமிழ் சமூகத்தால் கொண்டாடப்பட்டார்.

தமிழ் தேசியக்கூட்டமைப்பின் அரசியல் நிலைப்பாட்டை எதிர்த்தவர்கள் முன்வைக்கும் அரசியலில் பொருந்துபவர் முதல்வர் விக்னேஸ்வரன். தமிழ் தேசிய மக்கள் முன்னணிக்கான மக்கள் ஆதரவை முதல்வர் விக்னேஸ்வரனின் "வாக்கு வங்கியில்" இருந்து அதிகரிக்க முடியும் என்ற கூட்டல் கணக்கு எந்த வகையில் சரியாகும் என்பது கேள்வியாகும். முதல்வராக தேர்ந்தெடுக்கப்படுவதற்கு நீதியரசர் விக்னேஸ்வரன் பெற்ற வாக்குக்களின் கணிசமானது தமிழ்த் தேசியக்கூட்டமைப்பின் "வாக்குவங்கி" யினால் கிடைத்தது என்பது தான் யதார்த்தம். சரி, நடைமுறை விடயங்கள் சிலவற்றை வெளிப்படையாகவே பேசி விடுவோம்.

முதல்வர் விக்னேஸ்வரனை எதிர்க் கட்சித்தலைவர் இரா.சம்பந்தனுக்கு மாற்றீடாக ஒரு தரப்பினர் நோக்குகின்றனர். தமிழ் தேசியக்கூட்டமைப்பின் மீதான அதிருப்தி இந்த மாற்றீடு அரசியல் என்ற நிலையில் நிறுத்தியுள்ளது. ஆனாலும் தான் தலைமை தாங்கும் வட மாகாணசபையில் சில அமைச்சர்கள் மற்றும் உறுப்பினர்களைத் தவிர ஏனையவர்களின் ஆதரவை முதல்வர் விக்னேஸ்வரன் பெறவில்லை என்ற ஒரு கருத்து உதாசீனப் படுத்தமுடியாதது. அதே வேளை சில அமைச்சர்கள் மீதான ஊழல் குற்றச்சாட்டுக்கள் உட்பட்ட விடயங்களில் தகுந்த நடவடிக்கை எதனையும் முதல்வர் எடுக்கவில்லை என்ற கருத்தும் கவனத்தில் கொள்ளப்பட வேண்டியது. இரா.சம்பந்தன் தனது நீண்ட அரசியல் வாழ்வில் ஏற்படுத்திக் கொண்டுள்ள தொடர்புகள் ( குறிப்பாக வெளிநாடுகளின் தலைவர்கள் மற்றும் இராஜதந்திரிகளுடன் ) பிரதானமானவை. அவ்வாறான தொடர்புகளின் வலிமையும் தேவையும் எளிதில் உதாசீனம் செய்ய முடியாதவை.

இரா.சம்பந்தன் மீதும் அவர் தலைமையிலான தமிழ் தேசியக்கூட் டமைப்பின் மீதும் அதிருப்தி அதிகம் உள்ளதை ஏற்றுக்கொள்வோம். அதற்கான காரணிகளையும் அறிவோம். அதனால் மாத்திரம் இரா.சம்பந்தனுக்கு மாற்றீடாக சி.வி.விக்னேஸ்வரனை பரிந்துரைத்து விட்டு அனைத்தும் முடிந்து விட்டது என்று கணக்கை முடிக்க முடியாது. முடிக்கவும் கூடாது "அரசியல்" அதனையும் தாண்டியது...

